# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

   வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

*தொலைபேசி:*
7 1 2 3 1

*விவரங்களுக்கு:*
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்

## மூன்று பகுதிகள்

ஒவ்வொரு பகுதியும் சுமார் 600 பக்கங்கள்

டெம்மி சைஸ் அழகான காலிகோ பைண்டிங் (பிளாஸ்டிக் ஜாக்கெட்)

ஒரு செட் ரூபாய் 100.

முன்கூட்டியே பதிவு செய்துகொள்பவருக்கு ரூ. 50 மட்டுமே.

இச்சலுகை 1982 அக்டோபர் மாதம் இறுதி வரை உண்டு.

மற்ற விவரங்கட்கு உள்ளே பார்க்கவும்.



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்

## மூன்று பகுதிகள்

### ஒவ்வொரு பகுதியும் சுமார் 600 பக்கங்கள் கொண்டது.

அன்புடையீர்,

வணக்கம். இறைவனது திருவருளால் பகவான் **ஸ்ரீராமகிருஷ்ணர்** திருவாய் மலர்ந்தருளிய அமுதமொழிகளைத் தமிழ்மக்களுக்கு நூல்வடிவில் அளிக்கும் வாய்ப்பு கிட்டியுள்ளமைக்குப் பெரிதும் மகிழ்கிறோம்.

**ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** உலக இன்பங்களைத் தேடியலேயும் மக்களுக்கு உண்மையான இன்பம் எதுவென்று உணர்த்துவது மட்டுமல்லாமல், அந்த இன்பத்தை அடைய வழியையும் காட்டுகின்றன. உலகமாயையில் சிக்கி, உய்யும் வழி காணுது தத்தளிக்கும் மனித இனத்திற்கு, இவ்வமுத மொழிகள் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்கின்றன. மனித சமுதாயத்திற்கு, ஏன்? உலகத்திற்கேகூடத் தேவையான உண்மைகள் இவரது உபதேசங்களில் காணக் கிடைக்கின்றன.

"தெய்வ பக்தி ஒரு மனித உருக் கொண்டாற் போன்ற, இவரது ஆன்மிக அனுபவங்கள் நிறைந்த வாழ்க்கை உலக நன்மைக்காகவே எழுந்தது. இவரது உபதேசங்கள் இறைவனை நேருக்கு நேர் நாம் காணுமாறு செய்ய வல்லவை. கடவுள் ஒருவரே உண்மை; மற்ற அனைத்தும் மாயை என்பதை இவ்வுபதேசங்களைப் படிப்போர் உணராமற் போகார்" என்றார் **காந்தியடிகள்.**

இறைவனின் இயல்புகள், பக்தியின் பல்வேறு நிலைகள், ஞானத்தைப் பற்றிய பல் வகை விளக்கங்கள், மாயையைப் பற்றிய தெளிவான விரிவுரைகள், வேத, சாஸ்திர, புராண, இதிகாச நூல்களில் புரியாதன, பொருந்தாதன என ஒதுக்கிவிடப்பட்ட கருத்துக்களில் அடங்கிக் கிடந்த தத்துவங்கள்— இவற்றை அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் சம்பவங்கள், எளிய உதாரணங்கள் வாயிலாகவும், பொருத்தமான கருத்தாழமிக்க கதைகள் வாயிலாகவும் தெள்ளத் தெளிவாக விளக்குகின்றார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர். பொருள் பொதிந்த ஒரு மதத்திற்காகத் தாய்நாடு ஏங்கிக்கொண்டிருந்த காலத்தில் பாமர மக்களுக்கும் பயன்படும் வகையில் ஹிந்து சமயத்தை நிலைநிறுத்தினார் குருதேவர்.

தொழில் துறை, விஞ்ஞானம் இவற்றின் முன்னேற்றத்தினால் சிறிதாகிக் கொண்டு வரும் இன்றைய உலகில் மனிதாபிமானத்திற்கும் பண்பாட்டிற்கும் ஆபத்து அதிகரித்து வருகிறது. போர்க்கருவிகளால் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டிய அவலநிலை நாடுகளுக்கு ஏற்பட்டுள்ளது. இத்தகைய பேராபத்துக்கள் சூழ்ந்த காலத்தில் மனித இனத்திற்கு விடிவுக் காலம் தெய்வ பூமியாம் இந்திய நாடு காட்டும் ஆன்மிக வழியில்தான் உள்ளது.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பேரன்பு பூண்ட சரித்திரப் பேராசிரியரான A. Toynbee அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார். "இந்த அணுயுகத்தில் ஜாதி, மதம், இனம், மொழி, நாடு என்ற எல்லைக்குள் வளர்ந்துவரும் குறுகிய வேறுபாடுகளைப் போக்கி ஆன்மிக நெறி

யால் ஒருமைப்பாட்டைக் காட்டவல்லது இந்திய ஆன்மிகத் துறையே. இதில் ஸ்ரீராமகிருஷ்ணரின் பங்கு மகத்தானது. காரணம், எளிமையே வடிவான இவரது உபதேசங்கள் ஆன்மிக தரிசனத்தின் அடிப்படையில் எழுந்தன."

வெள்ளப் பெருக்கெனக் காலங்காலமாக ஆன்மிகப் பெரியோர்கள் தோன்றித் தமிழ்நாட்டைப் பக்திக் களஞ்சியமாகச் செய்திருக்கின்றனர். ஆன்மிகத் துறையில் பெருஞ்செல்வர்களாக விளங்கும் தமிழ்பேசும் மக்களுக்கு, பக்தி வயலாக உள்ள தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு மேலும் ஓர் அணியாக ஸ்ரீராமகிருஷ்ணரின் மொழியமுதத்தை அளிப்பதில் நாங்கள் பெருமை கொள்கிறோம்; பெருமிதம் அடைகிறோம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடராக விளங்கிய மஹேந்திரநாத் குப்தா என்பார் குருதேவர் தம் சீடர்களுடனும், பக்தர்களுடனும், தம்மைக் காணவந்த மக்கட் கூட்டத்துடனும் நிகழ்த்திய உரையாடல்களைத் தாம் கேட்டவண்ணமே அன்றாடம் தமது நாட்குறிப்பில் குறித்துவைத்திருந்தார். ம- என்று அழைக்கப்பட்ட இம் மகேந்திரர் பரமஹம்சரை முதன் முறையாக 1882-ல் பிப்ரவரி 26ஆம் தேதி சந்தித்தார். இந்த முதல் சந்திப்பிலேயே குருவும் சீடரும் ஒருவரை யொருவர் நன்கு உணர்ந்துகொண்டனர். அன்று முதற்கொண்டு பரமஹம்சர் மகாசமாதி அடைந்தவரை ஏறக்குறைய 5 ஆண்டுகளுக்கும் மேலாகக் குருதேவரைக் கணக்கற்ற தடவைகள் சந்தித்துவந்தார். இவரது நாட்குறிப்பில் வரையப்பெற்ற விலை மதிப்பிடமுடியாத ஆன்மிகப் பொக்கிஷத்தைப் பிற்காலத்தில் நூலாகத் தொகுத்து **ஸ்ரீ இராமகிருஷ்ண கதாமிருதம்** என்ற பெயர்சூட்டி வங்க மொழியில் 5 பகுதிகளாக வெளியிட்டார். இந்நூல் ஆங்கிலம் முதலான மேலைநாட்டு மொழிகளிலும், பல இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தமிழில் இல்லாத குறை இன்று தீர்வதாயிற்று.

இவற்றை அப்படியே வங்காளத்திலிருந்து மொழிபெயர்த்து எளிய நடையில் தமிழ்மக்களுக்கு அளிக்கும் பணியை இப்போது சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடம் மேற்கொண்டுள்ளது. இந்நூல் தமிழில் மூன்று பகுதிகளாக வெளிவர உள்ளது. ஒவ்வொரு

---

சுவாமிகளுக்கு,

நான் *செட் அமுதமொழிகள் பிரசுரவிலையில் வாங்க ஆசைப்படுகிறேன். அதற்கான விலையைச் செட் ஒன்றுக்கு ரூ. 50/- வீதம் உடன் அனுப்பியுள்ளேன். தவணை /1/2/3

என் பெயரைப் பதிவுசெய்து புத்தகங்களை அனுப்பித்தரவும்.

* (எவ்வளவு செட் என்று குறிப்பிடவும்.)

இப்படிக்கு,

பெயர் :

விலாசம் : (கையொப்பம்)

பகுதியும் சுமார் 600 பக்கங்கள் (டெம்மிசைஸ்) கொண்டதாகும். முதற் பகுதியை அச்சுக்கு அனுப்பியுள்ளோம். இந்த ஆண்டு இறுதிக்குள் இது வெளிவரும் என்று எதிர்பார்க்கிறோம். இதைத் தொடர்ந்து அடுத்துள்ள இருபகுதிகளும் அடுத்த ஆண்டு இறுதிக்குள் அச்சாகிவிடும்.

மூன்று பெரிய புத்தகங்களை அச்சிட இப்போது இருக்கும் காகிதவிலையில் கிட்டத்தட்ட ரூபாய் இரண்டு இலட்சம் செலவாகும். எல்லாப் பகுதிகளும் அச்சாகி வெளிவரும் பொழுது மூன்று புத்தகங்களும் சேர்ந்து விலை சுமார் ரூபாய் 100/- ஆகலாம். மக்களின் பொருளாதார நிலைமையை மனத்திற் கொண்டு பிரசுர விலையை ரூபாய் 50/- ஆகக் குறைத்துக்கொடுக்கத் திட்டமிட்டுள்ளோம். இச்சலுகை அக்டோபர் மாதம் இறுதிவரை உண்டு.

பக்தர்கள் உடனடியாக அமுதமொழிக்குப் பணம் செலுத்தித் தங்கள் பெயர்களைப் பதிவுசெய்துகொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

முழுப்பணத்தையும் ஒரே சமயத்தில் செலுத்த இயலாதவர்கள் இரண்டு தவணைகளிலோ அல்லது மூன்று தவணைகளிலோ செலுத்தலாம்.

புத்தகம் பிரசுரமானதும் அறிவிக்கப்படும். சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் பிரதிகளை நேரில் பெற்றுக்கொள்ளலாம். தபாலில் பெற விரும்புவோர் அதற்கான கட்டணத்தைச் செலுத்திப்பெற்றுக்கொள்ளலாம்.

இத்துடன் இணைத்துள்ள கூப்பனைப் பூர்த்திசெய்து பணத்துடன் அனுப்பவும் மணியார்டர் மூலமோ அல்லது காசோலை மூலமோ அனுப்பலாம்.

**இத்திருப்பணிக்கு அன்பர்கள் தாராளமாக நன்கொடை அளித்து உதவுமாறு வேண்டுகிறோம்.**

சென்னை-4
1—7—82
தொலைபேசி: 71231

கடவுள் தொண்டில்
**சுவாமி தபஸ்யாநந்தர்**

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 || ஆகஸ்ட்—1982 || இதழ் 8

## பொருளடக்கம்



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.

## 1982 ஆகஸ்ட் மாத நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 4-8-82 | புதன்கிழமை | ஸ்ரீமத் சுவாமி நிரஞ்ஜனானந்த ஜயந்தி |
| 12-8-82 | வியாழன் | ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி |
| 14-8-82 | சனி | ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி பொதுக் கூட்டம் — மாலை 5-30 மணிக்கு |
| 18-8-82 | புதன் | ஸ்ரீமத் சுவாமி அத்வைதானந்த ஜயந்தி |
| 22-8-82 | ஞாயிறு | விநாயக சதுர்த்தி |

ஆகஸ்ட் 15 & 30 தேதிகளில் ஏகாதசி — மாலை வழிபாட்டுக்குப் பிறகு ராமநாம சங்கீர்த்தனம்

ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை மணி 4-30க்குத் தமிழில் சொற்பொழிவு உண்டு. எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாலை 5-30 மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் சுவாமி ராகவேசானந்தர் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)**

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம் — சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — தேவி மாஹாத்மியம் — சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் — ஆன்மிக வாழ்க்கை — சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் — பகவத் கீதை — பிரம்மசாரி சின்மயசைதன்யா
5. வெள்ளி — துளசி ராமாயணம் — சுவாமி வீதபயானந்தர்

# வேண்டுகோள்

செங்கல்பட்டிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளை கடந்த 42 ஆண்டுகளுக்கும் மேலாகக் கல்விப் பணியில் ஈடுபட்டுள்ளது. தற்போது மிஷன் ஓர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியையும், ஒரு பெண்கள் உயர்நிலைப் பள்ளியையும், நர்சரி வகுப்புகளுடன் கூடிய ஓர் ஆங்கிலத் துவக்கப் பள்ளியையும், உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கான மாணவர் விடுதி ஒன்றையும் நடத்தி வருகிறது.

ஏழை. நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த மாணவர்கள் தங்குவதற்கான விடுதி, கிராமங்களில் மருத்துவப் பணி புரிவதற்கு நடமாடும் மருத்துவ வேன், பிரார்த்தனை மண்டபம் கட்டுதல், வாசகசாலையும் நூல்நிலையமும் நிறுவுதல் போன்ற பணிகளை 23 லட்சம் ருபாய்ச் செலவில் செங்கல்பட்டு மிஷனின் கிளை மேற்கொள்ள இருக்கிறது. இந்தப் பணிகள் நிறைவேற நன்கொடை வழங்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

ரூ. 10,000மும் அதற்கு மேலும் நன்கொடை அளிப்பவர்களின் பெயர்கள் கட்டிடத்தில் தனியாகப் பதிக்கப்படும். மிஷனுக்கு அளிக்கப்படும் எல்லா நன்கொடைகளுக்கும் வருமான வரி விலக்கு உண்டு. நன்கொடையாகக் காசோலைகளையும் டிராப்டுகளையும் அனுப்புவோர், 'செயலாளர், இராமகிருஷ்ண மிஷன், செங்கல்பட்டு-603 001' என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

சுவாமி விருபாக்ஷானந்தர்
செயலர்
ஸ்ரீராமகிருஷ்ண மிஷன், செங்கல்பட்டு

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| தொகுதி 62 | துந்துபி ௵ ஆவணி ௴ | இதழ் 8 |
|---|---|---|


## பிரார்த்தனை

कृष्णाय वासुदेवाय देवकीनन्दनाय च ।
नन्दगोपकुमाराय गोविन्दाय नमो नमः ॥

க்ருஷ்ணாய வாஸுதேவாய தேவகீ-நந்தநாய ச |
நந்தகோபகுமாராய கோவிந்தாய நமோ நம : ॥

—ஸ்ரீமத் பாகவதம், 1-8-21

வசுதேவருடைய திருமகனும், தேவகீ நந்தனனும், நந்தகோபகுமாரனும், கோவிந்தனுமான கிருஷ்ணனுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

ஒன்றும் மறந்தறியேன்
ஓதநீர் வண்ணனை நான்,
இன்று மறப்பனோ
ஏழைகாள், — அன்று
கருவரங்கத் துள்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்,
திருவரங்க மேயான் திசை.

—இயற்பா, முதல் திருவந்தாதி, 6



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**சனிக்கிழமை, ஏப்ரல் 5, 1884**

அப்போது காலையில் ஏறக்குறைய எட்டு மணி இருக்கும். ம— தட்சிணேசுவரம் கோவிலுக்கு வந்து சேர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்த முகத்துடன் தமது அறையில் சிறிய கட்டிலின் மீது அமர்ந்திருந்தார். தரையில் சில பக்தர்கள் உட்கார்ந்திருந்தார்கள். பிராணகிருஷ்ண முகர்ஜியும் அங்கு இருந்தார். குருதேவர் அந்தப் பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார்.

பிராணகிருஷ்ணர் ஜனய் என்ற இடத்தைச் சேர்ந்த செல்வாக்கு மிகுந்த முகோபாத்தியாயர்களின் வம்சத்தில் பிறந்தவர். பணக்காரராகிய அவருக்குக் கல்கத்தாவில் சியாம்புகுர் என்ற பகுதியில் பெரிய வீடு இருந்தது. மேகன்ஸி என்ற பெயர் கொண்ட ஓர் ஆங்கில வர்த்தகச் சங்கத்தாரின் ஏலம்விடும் நிறுவனத்தின் நிர்வாகத் தலைவராக அவர் இருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவர் ஆழ்ந்த பக்தி கொண்டவர். அவர் இல்லற வாழ்க்கையில் இருந்து வந்தார் என்றாலும் அவருக்கு வேதாந்தம் கற்றுக்கொள்வதில் மிகுந்த ஈடுபாடு இருந்து வந்தது. அவ்விதம் வேதாந்தம் கற்பதனால் அவர் மிக்க மகிழ்ச்சி அடைந்து வந்தார். அடிக்கடி அவர் தட்சிணேசுவரம் வந்து குருதேவரைத் தரிசித்துப் போவது வழக்கம். ஒரு முறை அவர் குருதேவரைக் கல்கத்தாவிலுள்ள தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று பெரிய விழா நடத்தினார். பாக் பஜார் நீராடும் துறையில் அவர் தினமும் அதிகாலையில் கங்கையில் நீராடுவார். சௌகரியம் நேரும் போதெல்லாம் அவர் வாடகைக்குப் படகை அமர்த்திக்கொண்டு தட்சிணேசுவரத்திற்கு வந்து ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்துச் செல்வது வழக்கம்.

இன்றைய தினமும் அவர் தமது வழக்கப்படி படகை அமர்த்திக்கொண்டு, ம—வையும் தம்முடன் அழைத்துக்கொண்டு தட்சிணேசுவரம் புறப்பட்டார். படகு புறப்பட்டுச் சிறிது தூரம் செல்வதற்குள் கங்கையில் பலமாக அலைகள் வீச ஆரம்பித்தன. அலைகள் படகின்மீது மோதியது காரணமாகப் படகு பலமாக ஆட ஆரம்பித்து விட்டது. பிராணகிருஷ்ணருடன் இருந்த ம— தம்மைப் படகிலிருந்து இறக்கி விட்டுவிடும்படி கேட்டுக்கொண்டார். பிராணகிருஷ்ணரும் அவரது நண்பரும் ம—வுக்கு எவ்வளவோ தைரியம் சொல்லிப் பார்த்தார்கள். என்றாலும் ம- அவர்கள் சொன்னது எதையும் ஏற்றுக்கொள்ளாமல், ''என்னைக் கரையில் இறக்கி விட்டுவிடுங்கள். நான் கங்கைக் கரையோரமாகவே நடந்து தட்சிணேசுவரத்திற்கு வந்து விடுகிறேன்'' என்று திரும்பத் திரும்ப வற்புறுத்தினார். வேறு வழியின்றி, பிராணகிருஷ்ணர் ம—வைப் படகிலிருந்து கங்கைக் கரையில் இறக்கி விட்டு விட்டார்.

ம— கால்நடையாகவே தட்சிணேசுவரத்தை அடைந்தபோது பிராணகிருஷ்ணர் படகுப் பிரயாணம் முடிந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் குருதேவருடன் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டார். ம— தரையில் வீழ்ந்து ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துவிட்டு அறையில் ஒரு பக்கமாக அமர்ந்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (பிராணகிருஷ்ணரிடம்): ஆனால் மனிதரிடம் ஆண்டவன் மிகவும் அதிகமான அளவில் பிரகாசிக்கிறார். ''ஆண்டவன் எப்படி மனிதனாக வர முடியும்? மனிதனுக்குப் பசி தாகம் போன்றவை எல்லாம் இருக்கின்றனவே. அத்துடன் நோய், மனக் கவலை போன்றவற்றைக்

கூட அனுபவிக்க வேண்டியிருக்கிறதே!'' என்று நீங்கள் கேட்கலாம். அதற்குப் பதிலாக, ''பஞ்ச பூதங்கள் என்ற வலையில் அகப்பட்டுக்கொண்டு பிரம்மம் கண்ணீர் வடிக்கிறது'' என்றுதான் சொல்ல முடியும்.

ஸ்ரீராமபிரான் சீதையைப் பிரிந்த துன்பம் காரணமாக மிகவும் புலம்பினார் என்பது உங்களுக்குத் தெரியாதா? மேலும், ஹிரண்யாட்சன் என்ற அசுரனைக் கொல்வதற்காக மகாவிஷ்ணு வராகமாக அவதாரம் எடுத்தார். அதன்படி ஹிரண்யாட்சனை அவர் கொன்றார். ஆனால் ஹிரண்யாட்சனைக் கொன்றபிறகு நாராயணர் தமது இருப்பிடமாகிய வைகுண்டத்திற்குத் திரும்பிச் செல்ல விரும்பவில்லை. வராகமாகவே அவர் மகிழ்ச்சியோடு இருந்து வந்தார். அந்த வராகம் பல குட்டிகளை ஈன்றது. தன் குட்டிகளுடன் அது ஆனந்தமாக வசித்து வந்தது. தேவர்கள், 'இது என்ன? நாராயணர் இப்படிப் பன்றியாக இருந்து வருகிறாரே! அவருக்கு வைகுண்டத்திற்குத் திரும்பிப் போக வேண்டும் என்ற எண்ணமே தோன்றவில்லையே!' என்று தங்களுக்குள் வருத்தத்துடன் பேசிக்கொண்டனர். பிறகு தேவர் அனைவரும் சிவபெருமானிடம் சென்று, ''வராக அவதாரம் எடுத்த மகாவிஷ்ணு வைகுண்டத்திற்குத் திரும்பாமல் இன்னும் பன்றியாகவே இருந்து கொண்டிருக்கிறார்'' என்ற தகவலைக் கவலையோடு விளக்கமாகத் தெரிவித்துக்கொண்டார்கள். சிவபெருமான் மகாவிஷ்ணுவாகிய வராகத்திடம் சென்று, பன்றி உடலை விட்டு மகாவிஷ்ணுவாக வைகுண்டத்திற்குத் திரும்புமாறு பலவிதங்களில் வற்புறுத்தினார். ஆனால் சிவபெருமானின் அத்தகைய முயற்சிகளால் பயன் ஒன்றுமே ஏற்படவில்லை. மகாவிஷ்ணுவாகிய அந்த வராகம் தன் குட்டிகளுக்குப் பால் கொடுக்கத்தான் ஆரம்பித்தது! (எல்லோரும் சிரித்தல்) பிறகு சிவபெருமான் தமது திரிசூலத்தினால் அந்த வராகத்தின் உடலைக் கிழித்து அதைக் கொன்றார். பிறகு மகா விஷ்ணுவும் 'ஹி ஹி' என்று சிரித்துக்கொண்டே பன்றி உடலிலிருந்து வெளிவந்து தமது இருப்பிடமாகிய வைகுண்டம் திரும்பினார்.

பிராணகிருஷ்ணர் (குருதேவரிடம்): சுவாமி, 'அனாஹத சப்தம்' என்றால் என்ன?

ஸ்ரீராமகிருஷ்ணர்: 'அனாஹத சப்தம்' என்பது சதா சர்வகாலமும் தொடர்ந்து தானாகவே ஒலித்துக்கொண்டிருக்கும் ஓர் ஒலி ஆகும். பிரணவத்தின் த்வனியாகிய ஓங்காரம்தான் அது. பரப்பிரம்மத்தினிடமிருந்து அந்தச் சப்தம் சதா காலமும் எழுந்தபடியே இருக்கிறது. யோகிகளால் அந்தச் சப்தத்தைக் கேட்க முடியும். உலகின் ஆசாபாசங்களில் ஆழ்ந்திருக்கும் லௌகிக மக்களால் அந்தச் சப்தத்தைக் கேட்க இயலாது. ஓங்கார சப்தம் தனது நாபியிலிருந்து எழுகிறது என்பதையும், அதே சமயத்தில் அது பாற்கடலில் (மகாப்பிரளய காலத்தில் சிருஷ்டி துவங்குவதற்கு முன்னால் பரமாத்மா மகாகாரண நிலையில் இருக்கிறார் என்பது பௌராணிகர்களின் கருத்து. அந்த நிலை பாற்கடல் என்றும் சொல்லப்படுகிறது.) பள்ளி கொண்டிருக்கும் பரப்பிரம்மத்தினிடமிருந்து எழுந்துகொண்டே இருக்கிறது என்பதையும் யோகி மட்டுமே அறிந்திருக்கிறான்.

பிராணகிருஷ்ணர்: சுவாமி, மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்க்கையின் தன்மை எத்தகையது?

## முயற்சி

விதியும் முயற்சியும் ஒன்றோடொன்று சண்டை போடும் இரண்டு ஆடுகள் போன்றவை; அவற்றுள் வீர்யமற்ற ஆடு தோல்வியடைகிறது.

'என் பழைய வினை என்னை ஏவுகிறது' என்ற எண்ணத்தை முயற்சியினால் முறியடிக்க வேண்டும். தற்போதுள்ள முயற்சியைக் காட்டிலும் அது பெரிதல்ல.

—வாசிஷ்டம்

ஸ்ரீராமகிருஷ்ணர்: கேசவ சேனரும் இதே விஷயத்தைப்பற்றிக் கேட்டார். ஒரு மனிதனிடம் அஞ்ஞானம் இருக்கும்வரை, அவன் ஞானம் அடையும் வரை, அதாவது அவன் ஈசனது தரிசனம் பெறும்வரை, பிறவி அவனுக்கு உண்டு. அதுவரையில் அவன் பிறவி எடுத்துத்தான் ஆக வேண்டும். ஆனல் ஞானம் பெற்றபின் அவனுக்கு இந்த உலகத்திற்குத் திரும்பி வரும் அவசியமோ, வேறு உலகத்திற்குச் செல்லும் அவசியமோ ஏற்படாது.

குயவன் தன் பானைகளை உலர்வதற்காக வெயிலில் வைக்கிறன். அவற்றுக்குள்ளே சுட்ட பானைகள், சுடாத பச்சைப் பானைகள் என்ற இரண்டும் இருப்பதை நீங்கள் கவனித்திருக் கிறீர்கள் அல்லவா? ஆடுமாடுகள் அவற்றின்மீது நடக்கும்படி நேருமானல் பானைகளில் சில நொறுங்கிப் போகின்றன. முன்னரே சுடப் பட்டுள்ள உடைந்த பானைகளைக் குயவன் தூர எறிந்துவிடுகிறன்; ஏனென்றல் அவற்றல் இனி அவனுக்கு எந்தப் பயனும் இல்லை. ஆனல் பச்சைப் பானைகள் உடைந்திருந்தபோதிலும் அவற்றை அவன் சேகரிக்கிறன். அவற்றை ஒன்றகத் திரட்டிப் பிசைந்து, தன் சக்கரத்தில் வைத்துச் சுற்றுகிறன். அவ்விதம் அவன் உடைந்துபோன பச்சைப் பானைகளின் மண்ணைக் கொண்டே புதிய பானைகளை உண்டாக்குகிறன். அது போலத்தான் ஒரு மனிதன் ஈசனது தரிசனத்தைப் பெறும் வரைக்கும், அவன் குயவனுகிய ஈசனது கைக்குத் திரும்பவும் வர வேண்டியவனே ஆவான்; அதாவது மறுபடியும் மறுபடியும் அவன் பிறக்க வேண்டியவனே ஆவான்.

வேகவைத்த நெல்லை விதைப்பதனல் என்ன பயன் ஏற்படும்? அது ஒருகாலும் முளைக்காது. அது போல் ஒருவன் ஞானம் என்ற தீயால் வறுக்கப்பட்டுச் சித்த புருஷனுக ஆகிவிடுவா னுயின், அவன் புதிய சிருஷ்டிக்கு (படைப்புக்கு) ஆளாகமாட்டான். அவன் விடுபட்டு முக்தி அடைந்தவனுக ஆகிவிடுகிறன்.

புராணங்களின் கருத்துப்படி, பக்தனும் பகவானும் வெவ்வேறன இரண்டு விதத் தத்துவங்கள் (உண்மைப் பொருள்கள்). ‘நான்’ என்பது ஒரு தத்துவம்; ‘நீ’ என்பது மற்றெரு தத்துவம். உடல் ஒரு மட்பாண்டம் போன்றது; அதில் மனம், புத்தி, அகங்காரம் என்னும் தண்ணீர் இருக்கிறது. பிரம்மம் சூரியனைப் போன்றது. இந்தச் சூரியன் அந்த மட்பாண்டத் திலுள்ள தண்ணீரில் பிரதிபலிக்கிறது. அது காரணமாகப் பக்தன் பகவானின் தெய்விக வடிவத்தைக் காண்கிறன்.

# செய்திகள்

* நாட்டறம்பள்ளி அருகிலுள்ள தோப்பல குண்டா கிராமத்தில் சமீபத்தில் தீ விபத்து ஏற்பட்டது. பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்குப் பாத்திரங்கள், வேஷ்டி, பக்கெட், பாய்கள், சிறுவர்களுக்கான சட்டைத்துணி ஆகியவற்றை நாட்டறம்பள்ளி ஸ்ரீராமகிருஷ்ண மடம் வழங்கி யது.

* நாட்டறம்பள்ளி, ஸ்ரீராமகிருஷ்ண—விவே கானந்த மன்றம் ‘ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா’ என்ற பெயரில் நர்சரிப் பள்ளியைத் துவக்கி யுள்ளது.

* வடஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த அண்டப்பேட்டையில் ‘ஸ்ரீராமகிருஷ்ண — விவே கானந்த உழவர் மன்றம்’ இயங்கி வருகிறது. அந்த மன்றத்தின் சார்பாக 1-7-82 ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா என்ற பெயரில் நர்சரிப் பள்ளி துவக்கப்பெற்றது.

* தென்னர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த வளையாம்பட்டு கிராமத்தில் கடந்த இரண்டு ஆண்டுகளாக சுவாமி விவேகானந்தர் மன்றம் இயங்கி வருகிறது. அந்த மன்றத்தின் சார்பாக ஜுலை 3-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா என்ற பெயரில் நர்சரிப் பள்ளி துவங்கப் பெற்றது.

* அரக்கோணம், ஸ்ரீராமகிருஷ்ண — விவே கானந்த மன்றம் ஜுலை 9-ஆம் நாள் விவேகா னந்த நர்சரிப் பள்ளியைத் துவக்கியது.

* ராஜஸ்தான் மாநிலத்தில் ஜயப்பூர் மாவட் டத்தில் வெள்ளத்தினல் பாதிக்கப்பட்ட 186 கிராமங்களைச் சேர்ந்த 10,563 குடும்பத்தினருக்கு 27,275 வேஷ்டிகளும் 27,903 புடைவைகளும் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் இதுவரை விநியோகித் துள்ளது.

* ஒரிஸ்ஸா மாநிலத்தைச் சேர்ந்த கட்டக் மாவட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் வெள்ள நிவாரணப் பணிகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. இதுவரை 566 குடும்பங் களைச் சேர்ந்த 3,396 பேருக்குத் தேவையான உணவுப் பொருள்கள், தட்டுமுட்டுச் சாமான்கள், உடைகள் வழங்கப்பட்டுள்ளன.

# விநாயகர் வழிபாடு

**ராஜம் ஐயராமன்**

'விநாயகன்' என்ருல் தனக்கு வேறு ஒரு தலைவன் இல்லாதவன் என்று பொருள். மற்றும் வி—விசேஷமான, நாயகர்-எல்லோருக்கும் மேலான நாயகர் எனவும் பொருள் கூறுவர். வாக்குருபமான சப்தப்பிரம்மமே அவரது சொருப மாகும். கணபதியை மூலாதாரத்திற்கு அதிபதி என்று சொல்லுவது மரபு.

எல்லா ஒலிகளுக்கும் மூல ஒலியாக இருப்பது 'ஓம்' என்ற பிரணவம் என்பது உபநிடதங்களின் வாக்கு. அத்தகைய பிரணவத்தின் காட்சிப் பொருளாக விளங்குபவரே விநாயகர்.

பிரணவத்தின் வரிவடிவமான விநாயக வடிவம், பரம்பொருளைப் பிரணவ ரூபத்தில் காட்டும் வடிவமாகும்.



**விநாயகரின் வரிவடிவம்**

விநாயகரது ஒடிந்த கொம்பு இருக்கும் இடத் தில் ஓங்காரத்தின் மேற்சுழி ஆரம்பித்து அங் கிருந்து வலக் கை வழியாக மேலே சென்று கிரீடத்தைச் சுற்றி இடக்கைப் பாசம் வரை வளைந்து நெற்றிப் பொட்டு வரையிலும் சென்று, துதிக்கை வழியாகக் கீழ் இடக்கை வரை வந்து கால் வரை இறங்குகிறது. இடக் கையும் அதில் இருக்கும் மோதகமும் (o) என்பதைக் குறிக் கின்றன. இதுவே விநாயகரின் வரிவடிவமாகும்.

விநாயகர் அனைத்தையும் கடந்து நிற்கும் உண்மைப் பொருளுமாயும், அனைத்திற்கும் உள் நின்று இயக்கும் பொருளுமாயும் இரண்டு இயல்புகளையும் தம்மிடம் கொண்டுள்ளார் என்பதை 'அணுவிற்கு அணுவாய், அப்பாலுக்கு அப்பாலாய்' என்ற ஔவையாரின் வாக்கின் மூலம் உணரலாம்.

மிகப் பெரிய உருவமாக யானைத் தலையுடனும் பேழை வயிற்றுடனும் காணப்படும் விநாயகருக்கு மிகச் சிறிய மூஞ்சூறு வாகனமாக அமைந்துள்ளது. இதனுல் சகல புவனங்களையும் கடந்து பருமை யான உருவம் கொண்டபோதிலும், சின்னஞ் சிறிய அணுவான மூஞ்சூறு தாங்கும் அளவிற்கு இலேசாய் அன்பின் உருவாய் அருளின் வடிவாய் அவர் இருப்பதை உணருகிரேம்.

நாம் எந்த வேலையைத் தொடங்கும்போதும் விநாயகரை வணங்கியே ஆரம்பிக்கின்ரேம். எழுதும்போதுகூடப் பிள்ளையார்சுழியாக 'உ' என்று போட்டே ஆரம்பிக்கிரேம். பிள்ளையார் சுழி என்பது பிரணவத்தின் திரிந்த வடிவமே யாகும்.

கடவுளை நினைத்துக் காரியங்களைத் தொடங்கும் போது உயிர்களுக்கு ஆணவ முனைப்புக் கெட்டுக் கடவுள் அருள் கிடைக்கும். அவன் அருளோடு இயற்றப்படும் செயல்கள் அனைத்தும் கடவுள் செயலாக விளக்கம் பெற்று உயிர்களின் வல் வினையை வேரறுக்கும் என்பதே பிள்ளையார்சுழி போடுவதன் உட்கருத்து.

கணேசபுராணத்தில் சதாசிவன், பராசக்தி, முருகன், விஷ்ணு, சூரியன் எல்லாரும் விநாய கரே என்று கூறப்பட்டுள்ளது. பஞ்சாயதன பூஜையில் முதலிடம் பெறுபவரும் விநாயகரே யாவர்.

ஆற்றல் நிறைந்த விநாயகரைப் பல பெயர் களில் பாரதமெங்கும் மக்கள் வழிபடுகிருர்கள். கணபதி, விநாயகர், விக்னேசுவரர், ஏகதந்தர், ஏரம்பர், லம்போதரர், கஜானனர் என்ற பல பெயர்களில் வழிபடுகின்றனர்.

காணபத்தியத்தில் விநாயகருக்கு முப்பத் திரண்டு பேதங்களும் அவற்றிற்கு ஏற்பப்

புராணங்களும் கூறப்பட்டுள்ளன. 1. பால கணபதி, 2. தருண கணபதி, 3. பக்தி கணபதி, 4. விர கணபதி, 5. சக்தி கணபதி, 6. துவிஜ கணபதி, 7. சித்தி கணபதி, 8. உச்சிஷ்ட கணபதி, 9. விக்கின கணபதி, 10. க்ஷிப்ர கணபதி, 11. ஏரம்ப கணபதி, 12. லட்சுமி கணபதி, 13. மஹா கணபதி, 14. விஜய கணபதி, 15. நிருத்த கணபதி, 16. ஊர்த்துவ கணபதி, 17. ஏகாட்சர கணபதி, 18. வர கணபதி, 19. திரயட்சர கணபதி, 20. க்ஷிப்ரப்பிரசாத கணபதி, 21. ஹரித்ரா கணபதி, 22. ஏகதந்த கணபதி, 23. சிருஷ்டி கணபதி, 24. உத்தண்ட கணபதி, 25. ருணமோசன கணபதி, 26. துண்டி கணபதி, 27. துவிமுக கணபதி, 28. திரிமுக கணபதி, 29. சிங்கமுக கணபதி, 30. யோக கணபதி, 31. துர்க்கா கணபதி, 32. சங்கடஹர கணபதி என்று கூறுகின்றனர்.



கணேச மந்திரங்களில் மிகச் சிறப்பாகப் பதினாறு மந்திரங்களைக் கூறுவர். அவை— 1. ஓம் ஸுமுகாய நம:, 2. ஓம் ஏகதந்தாய நம:, 3. ஓம் கபிலாய நம:, 4. ஓம் கஜகர்ணகாய நம:, 5. ஓம் லம்போதராய நம:, 6. ஓம் விகடாய நம:, 7. ஓம் விக்னராஜாய நம:, 8. ஓம் கணாதிபாய நம:, 9. ஓம் தூமகேதவே நம:, 10. ஓம் கணாத்யக்ஷாய நம:, 11. ஓம் பாலசந்த்ராய நம:, 12. ஓம் கஜாநநாய நம:, 13. ஓம் வக்ரதுண்டாய நம:, 14. ஓம் சூர்ப்பகர்ணாய நம:, 15. ஓம் ஹேரம்பாய நம:, 16. ஓம் ஸ்கந்தபூர்வஜாய நம:, ஓம் மகாகணபதயே நம: என்று பதினாறு மந்திரங்களால் சிறப்பாக வழிபடுவர்.

---

எதிர்காலத்தில் வரும் துன்பங்களைக் கற்பனை செய்யாதே. இன்றைய முறையில் தெய்விகமாக வாழ்ந்தால் எதிர்காலம் மகிமை பொருந்திய தாகும். —ஓர் அன்பர்

---

**விநாயக வழிபாட்டின் துவக்கம்**

விநாயக வழிபாடு முதல்முதலில் குப்தர்கள் காலத்தில்தான் சிறப்பாகப் பரவ ஆரம்பித்தது. வராஹமிஹிரர் இயற்றிய 'ப்ருஹத் ஸம்ஹிதை' யில் விநாயகருடைய சிலை உருவாக்குவது பற்றி விளக்கிக் கூறியுள்ளார். பௌத்தர்கள் காலத்தில் விநாயக வழிபாடு மேலும் பிரபல மாகியுள்ளது.

மகாயான பௌத்தர்கள் 'கணபதிஹ்ருதயம்' என்ற மந்திரத்தை ஜபிக்கின்றனர்.

விநாயக வழிபாடு இந்தியாவில் மட்டுமல்லாமல் கடல்கடந்து தென்கிழக்கு ஆசியா, ஆப்கானிஸ்தானம், நேபாளம், திபேத், மங்கோலியா, சீனா, ருஷியா, ஜப்பான், மெக்ஸிகோ முதலிய நாடுகளில் பரவியுள்ளது.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் ஹிந்துக் கடவுளாகவும், தொலைகிழக்கு நாடுகளில் புத்தக் கடவுளாகவும் பிள்ளையாரை வழிபடுகின்றனர்.

வெளிநாடுகளில் ப்ராகெனஸ், மகாவிநாயகா, ஹேரம்பர், யானைகளின் ஆத்மராஜா, கான்கீதன் போன்ற பல பெயர்களில் வழிபடுகின்றனர்.

மேலும், விநாயகரைப் பெண் உருவமாகக் கணேசானி, கஜானனி என்ற பெயர்களில் சுசீந்திரம், மதுரை, ஜபல்பூருக்கு அருகிலுள்ள பேலேகட், மற்றும் திபேத் முதலிய இடங்களில் வழிபடுகின்றனர்.

ஹளபீடு என்ற இடத்தில் நாட்டிய கணபதியாகவும், ஸ்ரீசைலத்தில் புல்லாங்குழல் ஊதும் கணபதியாகவும், வேலூர் ஜலகண்டேசுவரர் ஆலயத்தில் குழந்தை வடிவிலும் விநாயகரை வழிபடுகின்றனர்.

வடக்கே கார்த்திகேயனின் சகோதரர் என்றும், அவருக்கு ஸித்தி புத்தி என்ற இரண்டு மனைவியருடனும் வழிபடுகின்றனர்; ஆனல் தெற்கே முருகனுக்கு அண்ணனுகவும் பிரம்ம சாரியாகவும் வழிபடுகின்றனர்.



யானைத்கலையையும் தேவஉடலையும் கொண்டு மிருகமாகவோ மனிதராகவோ எண்ண முடியாமலும், தொந்தி வயிற்ருேடும், சப்பைக் காலோடும் காணப்படும் விநாயகர் நாம் உலகில் காணும் எந்தவகை இனத்தையும் சாராதவராக இருக்கிருர்.

## விநாயகரின் திருவுருவத் தத்துவம்

விநாயகருடைய உருவம் பல அரிய உண்மை களையும் தத்துவங்களையும் நமக்கு உணர்த்து கிறது.

அவரது உருவம் ஐந்து கரமும், யானைமுகமும், மனித உடலும், தும்பிக்கை தவிர மற்றக் கைகளில் பாசம், அங்குசம், தந்தம் (உடைந்த கொம்பு), மோதகம் என்ற நான்கு பொருள்களையும் ஏந்தியவராய், மூஷிக (முஞ்சூறு) வாகனத்தில் அமர்ந்துள்ளார். இந்த உருவமே பெரும்பாலான இடங்களில் காணப்படுகிறது.

திருவடி — அபர, பர ஞானம் இரண்டுமே அவரது இரண்டு திருவடிகளைக் குறிக்கின்றன.

பெருவயிறு (பேழை வயிறு)— பரப்பிரம்ம மான விநாயகரின் வயிற்றில் சகல புவனங்களும் அடங்கியுள்ளன என்பதைக் காட்டவே பெருவயிறு படைத்துள்ளார்.

ஐந்து கரம் — விநாயகர் ஒரு கரத்தில் பாசம் ஏந்தியுள்ளார். இது தீயவற்றைச் செயற்படாமற் கட்டுவது. அதாவது ஆசாபாசங்களாகிய படு குழியில் விழுந்து பிறவிக்கு வழிகோலுவதைத் தடுப்பதற்காக ஏந்தியுள்ளார். இது படைத்தல் தொழிலைக் குறிப்பது.

மற்ருெரு கரத்தில் அங்குசத்தை ஏந்தியுள்ளார். அங்குசம் அழிக்கும் தன்மையது. உயிர்களின் பாசத்தை அங்குசத்தால் வெட்டி நெறியில் செலுத்துவதற்காக ஏந்தியுள்ளார். இது அழித்தல் தொழிலைக் குறிக்கும்.

முன்கை ஒன்றில் ஒடிந்த கொம்பை ஏந்தி யுள்ளார். இது கயமுகாசுரனைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றியதன் ஆற்றலைக் குறிக்கிறது. மேலும், ஒடிந்த கொம்பைப் பாச ஞானம் என்பர். இதுவே சிவஞானத்திற்கு வாயிலாக அமைவது. இது காரணமாகவே பாசஞான நூல்களாகிய மகாபாரதம் போன்ற நூல்களை எழுதும் எழுத்தாணியாகக் கொம்பு இருந்தது. இது காத்தல் தொழிலைக் குறிக்கும்.

இடது முன்கையில் மோதகத்தைத் தாங்கி யிருக்கிருர். மோதகம் பேரின்பத்தின் அடை யாளம் என்றும், அமிருத கலசம் என்றும் கூறப்படும். மோதகம் என்பதற்கு அழிவற்ற தன்மை என்று பொருளாகும். இது அநுக் கிரகத்தைக் குறிக்கும்.

சிறப்பு அவயவமான துதிக்கை மறைப்புத் தொழிலைக் குறிக்கிறது. சுஷும்ன நாடி வழியாக மிருத்யு வாழும் மூலாதாரப் பகுதியைக் கடந்து மரணத்தை மாற்றும் யோகத்தைக் குறிப்பது. மேலும், மிகப் பெரிய பொருளைத் தூக்குவது போல, மிகச் சிறிய ஊசியையும் எடுக்கும் ஆற்றல் கொண்டது.

செவி—முறம் போன்றது. இது எல்லாம் அறியும் தன்மையைக் குறிப்பது. சப்தப் பிரம்மத்தை உணர்த்தி, பிரகிருதி மாயையைக் கடக்க உதவுவது. இதை ஔவையார், ‘சத்தத்தினுல் சதாசிவம் காட்டி’ என்ருர்.

யானைமுகம்— யானை கம்பீரமும் பலமும் ஆற்றலும் கொண்டு விளங்குவது; பிரண வத்தையே முழக்கமாகக் கொண்டது. பிரணவமே அறிவு உருவமாக இருந்து தேகத்தை ஆள்கிறது என்பதைக் குறிக்கும்.

நாகாபரணம்— பாம்பு குண்டலினி சக்தி வடிவம். இது சுருண்டுள்ள நிலையை மாற்றி உடலெங்கும் தரிக்கச் செய்துள்ளார். பாம்பையே பூணூலாகவும் அணியாகவும் உதரபந்தமாகவும் அணிந்துள்ளது இதையே குறிக்கும்.

இவ்வாறு பல தத்துவங்களை உள்ளடக்கிய ஞானத்தின் திருவுருவமான விநாயகரை விரத மிருந்து வழிபட்டு அவரது அருளைப் பெற வேண்டும்.

**விநாயக விரதம்**

சுக்கிரவாரம், விநாயக சதுர்த்தி, விநாயக சஷ்டி முதலிய நாட்கள் விநாயகரை வழி படுவதற்கு உரிய காலங்களாகும்.

விநாயக சதுர்த்தி விரதம் ஆவணி மாதத்தில் வளர்பிறையில் வரும் சதுர்த்தியாகும். இந்த நாள் கயமுகாசுரனின் தலையைப் பொருத்திக் கொண்டு கஜமுகத்துடன் அவதாரம் செய்த நாளாகும். இது விநாயகருக்கு மிகவும் விசேஷ தினமாகும்.

அங்காரக சதுர்த்தி என்பது மாசி மாதம் கிருஷ்ணபட்சச் செவ்வாய்க்கிழமை கூடிய சதுர்த்தி நாளாகும். அங்காரகன் விநாயகரைப் பூஜித்து அருள் பெற்ற தினமாகும். அன்று சந்திரோதயமான பின்பு பூஜை செய்து வணங்குவது சிறப்பாகும்.



சங்கடஹர சதுர்த்தி என்பது ஒவ்வொரு மாதமும் கிருஷ்ணபட்சத்தில் வரும் சதுர்த்தி யாகும்.

புருகண்ட மகரிஷி, ஔவையார் போன்ற வர்கள் விநாயகரை வழிபட்டு அருள் பெற்றவர்கள் ஆவர்.



# விநாயகரின் வாகனம்

வினை தீர்ப்பவர் விக்கின விநாயகர். அவருக்கு வாகனமாகத் திகழ்வது மூஷிகம். அசுரசக்தியின் பிரதிநிதியாகிய மூஷிகாசுரனை, சத்துவசக்தியின் வெளித்தோற்றமாகிய விநாயகர் அடக்கி ஆளும் பொழுது அந்த அசுரசக்தியே அறிவுச் சக்திக்கு வாகனமாகிறது. ஆற்றல் அறிவுக்குக் கட்டுப்பட்டிருக்கும் வரை நலன்களையே தரும்.

பெருத்த உருவமுடைய விநாயகர் சின்னஞ் சிறிய உருவம் படைத்த மூஷிகத்தின்மீது அமர்ந்திருப்பது, எங்கும் பரவியுள்ள பரம்பொருள் சிறு துரும்பிலும் இருக்க முடியும் என்பதையே காட்டுகிறது.

விநாயகர் தடைகளை நீக்குகிற அறிவுச் சக்தி. மூஷிகமோ சுறுசுறுப்புக்கு எடுத்துக்காட்டு. சுறுசுறுப்பும் விடாமுயற்சியும் துணை இருக்க, தடைகளைத் துளைத்து நீக்க அறிவால் முடியும் என்பது விநாயகரும் மூஷிகனும் இணைந்த காட்சி காட்டுகிறது.

தந்திர நூல்களில் பூமியில் மறைந்து கிடக்கிற நெருப்பை மூஷிகனாகவும், மூலாதாரத்தில் உறைந்து கிடக்கிற சக்தியைக் கணேசனாகவும் குறிப்பிட்டுள்ளனர். இந்த இரண்டு சக்திகளின் இணைப்பு, தந்திர சாதகனுக்கு அவனுடைய வழிபாட்டிற்கு எல்லையற்ற ஆற்றலைப் பூமியில் இருந்து பெற வழி வகுக்கிறது.

—ராஜம் ஐயராமன்

# கண்ணன் தோழன் சீமாலிகன் !

அ. வே. சுப்பிரமணியன்

பகவத்கீதையில் கண்ணன் மண்ணில் தான் அவதாரம் செய்வதெல்லாம் நல்லோரைக் காத்தல், தீயோரை அழித்தல் என்ற இரண்டு நோக்கங்களுக்காகத்தான் என்று தெளிவாகக் கூறிவிட்டான்.

இவற்றில் நல்லோரைக் காப்பது என்ற நோக்கத்தை அவன் நிறைவேற்றும் முறை எல்லோரும் அறிந்ததே. தீயோரை நீக்குவதே அதன் ஒரு முக்கியக் கூறுகும்.



தவிரத் தன் அழகு, எளிமை, கருணை போன்ற குணங்களால் நல்லோரை வசீகரித்துத் தன் பக்கலில் நிறுத்திக் கொள்கிருன். அவரவர் தன்மைப்படியே சிலரை அழகாலும் சிலரை வீரத்தாலும் சிலரை அறிவாலும் சிலரை எளிமை யாலும் பலரைக் கருணையாலும் அருள் செய்கிருன்.

தீயோரை அழித்தல் என்பது சற்றுச் சிக்கலானது. இதில் நேரிடையான ஒரு வழி உண்டு : ஆயுதம் தாங்கிப் போர்புரிந்து தீயோரைக் கொல்லுதல்தான் அது. இராமா வதாரத்தில் வாலியையும் இராவணனையும் கொன்றதும், கிருஷ்ணுவதாரத்தில் சால்வன், புண்டரீகவாசுதேவன் போன்ருேரை அழித்ததும் இதற்கு உதாரணங்கள்.

ஒவ்வோர் அவதாரத்திலும் இறைவனுடைய ஆயுதங்கள் தனியானவை. புராணங்களிலும் தோத்திரங்களிலும் புகழ் பெற்றவை. அவற் றுக்குச் சிறப்பான தனிப் பெயர்களும் உண்டு.

இராமனின் வில்லுக்குக் கோதண்டம் என்று பெயர். கண்ணனின் வாளை நந்தகம் என்றும், கதையைக் கௌமோதகீ என்றும், சக்கரத்தைச் சுதர்சனம் என்றும் வழங்குவர்.

இந்தச் சாதனங்களைத் தவிர, நரசிம்மனுக வந்தபொழுது நகங்களை மட்டுமே பயன்படுத்திப் பகைவனை அழித்தான்.

கண்ணனுக அவதரித்தபொழுது கம்சனை முஷ்டியால் குத்திக் கொன்ருன்.

கண்ணனைப் பற்றிய கதைகளுக்கு மூலநூலாக விளங்குவது பாகவத புராணமே. ஆயினும், பாகவதத்தில் இல்லாத ஒரு கதையைப் பெரியாழ்வார் சொல்கிருர் : சீமாலிகன் என்றவன் இறந்த கதை அது. இந்தக்

---

உடலைத் தன்னைக்காட்டிலும் வேறு என்று பிரித்துச் சைதன்யத்தில் நிலை பெறுவாயானுல், இந்த க்ஷணமே நீ சுகத்தையும் அடைந்து, பந்தத்திலிருந்து விடுதலையடைந்தவனுக ஆவாய்.

—அஷ்டாவக்ர கீதை

கதையிலிருந்து புதியதொரு தத்துவத்தை உணர்ந்துகொள்கிறோம். கதை இதுதான்—



சீமாலிகன் கண்ணனோடு ஒன்றுகப் பழகும் நிலையில் இருந்தான். குணத்தில் கயவன்; மற்றத் தீய குணங்களோடு ஆணவம் என்ற இழிய தன்மை அவனது உள்ளத்தில் அரசு செலுத்தியது.

ஒரு நாள் சீமாலிகன் கண்ணனின் வீடு தேடி வந்தான். கண்ணன் அவனை வெகு மரியாதை யோடு வரவேற்று உபசரித்தான். சீமாலிகன் தான் வந்த கருத்தைக் கண்ணனிடம் அறிவித்தான் : ''கண்ணு ! நாம் இருவரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள், கல்வி, அறிவு, திறமை இவற்றில் எல்லாம் சரிசமமாக இருக்கிறோம். ஆனுல் உனக்கு உயர்வைத் தருவது ஒன்று......'' என்பதற்கு முன், கண்ணன் இடைமறித்துப் புன்சிரிப்புடன், ''நண்பனே! நீயும் நானும் எப்படிச் சமமான வர்கள் என்கிறுய்? உன் திறமை, குணங்கள் எங்கே? நான் எங்கே? ஒருநாளும் நான் உனக்கு ஒப்பாகமாட்டேன். இந்தப் பேச்சை விடு!'' என்ருன்.

சீமாலிகன் விடாமல் தொடர்ந்து, ''எப்படியும் உலகத்தோர் நம்மை எடைபோட்டுப் பார்க்கும் பொழுது, 'இவர்கள் இருவரும் மற்ற விஷயங்களில் சமமாக இருந்தாலும் சக்கரம் என்ற ஆயுதத்தை எய்வதில் கண்ணன் தேர்ந்தவன். இந்த ஒரு திறமையினுல் கண்ணனைப் பெரியவன் என்றே கருத வேண்டும்' என்று சொல்கிருர்கள். உன்னிடம் சிறப்பாக உள்ள இந்தக் கலையை நான் கற்றுக்கொண்டு விட்டால் உனக்கும் எனக்கும் வேறுபாடு இருக்காது. எனக்கு இதைக் கற்றுத் தருவாயா?'' என்ருன்.

கண்ணன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்; சீமாலிகன் விடுவதாக இல்லை. ''இதைப் பெரியதொரு கலை என்றெல்லாம் உயர்த்துவது தவறு. பார், எவ்வளவு எளிது என்று!'' என்று சொல்லிக் கண்ணன் தன் வலக்கையில் இருந்த திருவாழியை உயர எறிந்தான். அது ஆயிரம் கதிரவர்களின் பேரொளியுடன் மேலே சென்று இறங்கி வந்தது; வந்து கண்ணனின் கைவிரலில் ஒரு கிளி அமர்வது போல் மெல்லப் படிந்தது.



கண்ணன் சக்கரத்தை விட்டபொழுது, 'பூ! இவ்வளவுதானு?' என்று சொல்லத் தோன்றி யது. திறமை படைத்தவர் எந்தக்

> விழிப்பு நிலையில் கனவில் காணப்பட்ட நகரம் போல் இந்த உலகம் இருக்கிறது. இதை உணர்ந்துகொண்ட நிலையில் விவேக முடையவனுக்கு எவ்வாறு ஆசை தோன்றக் கூடும்?
>
> —பிரம்ம கீதை

காரியம் செய்தாலும் பார்ப்போருக்கு எளிதாகத் தோன்றும். சீமாலிகனும் அப்படித்தான் நினைத்தான். 'இவ்வளவுதானு? நான் என்னவோ என்று நினைத்துவிட்டேன்' என்று எண்ணிக்கொண்டே, ''ஒரு முறை உனக்கெதிரே எய்து பழகுகிறேன், கண்ணு!'' என்று சொன்னுன். கண்ணன் வேண்டாம் என்று தடுத்தும் கேட்காமல் ஆயுதத்தைக் கையில் வாங்கிக் கண்ணன் செய்தது போலவே மேல் நோக்கி எய்தான்.

முன்பு போலவே சக்கரம் ஆயிரம் சூரியர்களுக்கு ஒப்பான பிரகாசத்துடன் மேலே சென்றது. ஆனுல் இறங்கி வந்தபொழுது கிளி போல் மெல்ல விரலில் படியாமல் சீமாலிகன் தலையை வெட்டிக் கீழே சாய்த்துவிட்டது.

பெரியாழ்வாரின் பாட்டு எளிய நடையில் அமைந்துள்ளது:—

**சீமாலிக னவனேடு தோழமை கொள்ளவும் வல்லாய்**
**சாமாறு அவனை நீ எண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்.**
**ஆமாறு அறியும் பிரானே! அணியரங்கத்தே கிடந்தாய்!**
**ஏமாற்றம் என்னைத் தவிர்த்தாய், இருவாட்சிப் பூச் சூட்ட வாராய்!**

—பெரியாழ்வார் திருமொழி, 2-7-8.

பெரியாழ்வாரின் கூற்றின்படி சீமாலிகன் இறக்கவேண்டும் என்று கண்ணன் எண்ணினன். சக்கரப் பயிற்சி பெற வேண்டும் என்ற எண்ணம் சீமாலிகனின் உள்ளத்தில் தோன்றிற்று. அதன் படியே செயற்பட்டு அவன் இறந்துபோனுன். கண்ணன் கையால் சீமாலிகன் இறக்கவில்லை; ஆனுல் அவன் இறந்தது கண்ணனின் சங்கற் பத்தாலே என்ற கதை தீயோரை அழித்தல் என்பது எத்தனை சிக்கலானது என்பதைக் காட்டி விடுகிறது. தீயோரின் உள்ளம் சிக்கலான உள்ளம் அல்லவா? அவர்களை அழிக்கும் முறைகளும் வேறு வேருனவை, அவரவர் தன்மைக்கு ஏற்ப அமைக்கப் பெற்றவை, சிக்கலானவை. ஆமாறு அறியும் பிரான் ஒருவனுக்கே அவை தெளிவாகப் புலப்படும்.

## இதயகமல வாசனு? துவாரகாபுரி வாசனு?



ஒரு முறை துர்வாச முனிவர், பாஞ்சாலியைச் சோதிக்கும் பொருட்டுத் தமது சிஷ்யகோடிகளுடன் அவளது இல்லத்திற்கு மதிய உணவிற்கு வருகை புரிந்தார். அவர் பாஞ்சாலியிடம் தாம் சீடர்களுடன் நதிக்கரைக்குச் சென்று நீராடி வருவதாகக் கூறிச் சென்ருர்.

குறுகிய நேரத்தில் அத்தனை பேருக்கும் அறுசுவை தயாரிப்பது இயலாத காரியம் என்பதை உணர்ந்த பாஞ்சாலி, கண்ணனை அழைத்தாள். கண்ணன் சற்றுத் தாமதமாகவே வந்தான். அதைக் கவனித்த பாஞ்சாலி பதற்றத்துடன் நிலைமையை விளக்கி, ''அன்று துயிலுரியப்படும்போது என் குரலுக்கு உடனே வந்தாய். ஆனுல் இன்று இந்த நேரத்தில் இப்படித் தாமதித்து வருகிருயே!'' என்ருள்.

அதற்குக் கண்ணன், ''அன்று துயிலுரியும்போது 'இதயகமலவாசா' என்று என்னை அழைத்தாய். நான் அந்தக் கணமே வந்தேன். இப்பொழுது நீ என்னை, 'துவாரகாபுரிவாசா' என்றல்லவா அழைத்தாய்? நான் துவாரகையிலிருந்து வரவேண்டாமா?'' என்று சிரித்துக்கொண்டே கூறினுன்.

—ஓர் அன்பர்

# நாம மகிமையும் ஜப விதியும்

சி. வி. சிவராமகிருஷ்ணன்

இறைவனின் திருத்தொண்டில் தம்மை ஈடு படுத்திக்கொண்ட எண்ணற்ற சான்றோர்கள் இணையற்ற இறைவனின் திருப்பெயரை, நாமத்தை நலிவற்ற நல்ல துணையாகப் பற்றி வாழ்ந்தனர்.

இறைவனின் நாம மகிமை அளப்பரும் பெருமை மிக்கது என்பதைத் தமது அனுபூதியால் கண்டு உலகுக்கும் உணர்த்தினர்.



வேதங்களைத் தொகுத்து, வேதாந்தம் என்று சொல்லப்படும் பிரம்ம சூத்திரங்களை இயற்றி, ஐந்தாவது வேதம் என்று தேவர்களாலும் பாராட்டப்பெற்ற, அறிவின், அனுபவங்களின் நிதியான மகா பாரதத்தை இயற்றிய வியாச முனிவர் தமது இறுதி நூலான பாகவதத்தின் இறுதியில்—

''நாம சங்கீர்த்தனம் யஸ்ய ஸர்வபாப ப்ரணாசனம்— நாம சங்கீர்த்தனம் அனைத்துப் பாவங்களையும் அறுத்துவிடுகிறது'' என்று சொல்லியிருக்கிறார்

பகவான் என்று பாராட்டப்பெறும் ரிஷி வியாசர் முற்றும் உணர்ந்து, மூலத்தின் தன்மையினை நாம் பற்றிக்கொள்ள நமக்குக் காட்டும் உபாயம் நாமஸ்மரணை அல்லது இறைவனின் நாமத்தை வாயாரப் பாடி மனதாரச் சிந்தித்தலாகும்.

இறைவனிடம் பக்தி என்பது அவனது கல்யாண குணங்களை வாழ்த்திப் பாடுவதில்தான் துவங்குகிறது. அவனது நாம மகிமையைப் பேசுவதில்தான் ஆரம்பமாகிறது.

அதுவே முற்றி இடைவிடாத சிந்தனையில் மூழ்கும்போது, அந்த நாமமே தூய மனதையும், துன்பமற்ற வாழ்வையும் நமக்குத் தந்து, தூயவனும் பரம்பொருளை நண்ணிக் கிடக்கச் செய்கிறது.

நாராயண நாமத்தால் தம்மைப் பாகவ தோத்தமராக்கிக் கொண்ட புரந்தரதாசர்—

''ஏ மனமே! ஹரி நாராயண, ஹரி நாராயண என்று சொல்! நாராயண நாமம் என்னும் விதையை நாரத மகரிஷி பூமியில் நட்டு வைத்தார்; துருவனால் அது உயிர்கொண்டது; பிரகலாதாழ்வாரால் அது முளைவிட்டது.

''ருக்மாங்கதனால் தளிர்த்து, குருவம்சத்தின் பிதாமகன் என்று பாராட்டப்பெறும் பீஷ்மரால் அது பூவாயிற்று.

''விஜயனின் மனைவியான திரௌபதியால் அது காயாயிற்று. கஜேந்திரனால் கனியும் பக்குவம் பெற்று, சுகமுனிவரால் பரிபக்குவ மாயிற்று.

''அஜாமிளன் அதனை உண்டு சுவையறிந் தான். ஏ மனமே! அந்த ரசத்தை அனுபவிக்க, 'ஹரி நாராயண, ஹரி நாராயண' என்று சொல்'' என்று தம் மனதிற்கு உபதேசிக்கிறார்.

ஸாஹித்யாதபி சாஸ்த்ராணி
விசிஷ்டாநீதி சேந்மதி: |
ததோபி வேதாத்யயனம்
ததோபி ஹரிகீர்த்தனம் ||

''இலக்கியங்களைக்காட்டிலும் சாஸ்திரங்கள் உயர்ந்தவை. வேதங்களைப் பயில்வது அதனி லும் உயர்ந்தது; அந்த வேதப் பயிற்சியிலும் ஹரிகீர்த்தனம் சிறந்தது'' என்று ஹரிகீர்த்த னத்தின் சிறப்பை, உயர்வை நீலகண்ட தீட்சிதர் கூறுகிறார்.

பிரம்மரிஷி நாரதரே நாமஸ்மரணம் என்னும் ஹரிசங்கீர்த்தனத்தால் இறையனுபூதி பெற்ருர் என்ருல், நாமமகிமை பற்றி வார்த்தைகளால் விளக்க முடியுமோ? தமது விபூதியைப்பற்றிப் பேசும் கண்ணன், 'யக்ஞங்களில் நான் ஜப யக்ஞமாக இருக்கிறேன்' என்று பகவானின் நாமத்தை ஜபித்தலின் சிறப்பைச் சொல்லிக் காட்டுகிருன்.

உலகியல் வாழ்வில் உழன்றுகொண்டிருந்த திருமங்கையாழ்வார், வழிப்போக்கனுக வந்த இறைவனேயே வழிப்பறி செய்ய முனேந்தபோது அவருக்கு அருள்செய்ய எண்ணிய பகவான் தம் மெய்யுருக் காட்டி நாராயண மந்திரத்தை உபதேசிக்க, ஞானம் பெற்ற திருமங்கையாழ்வார் முதன்முதலில் பாடிய தமது பாடலில், தாம் செய்த பிழைகள் யாவும் கழியுமாறு தமக்கு வந்தமைந்த நாராயணநாமத்தின் பெருமையை,

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளேயவர் தம்மோடு
அவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்
நாராயணு என்னும் நாமம்

என்று பாடுகிருர்.

நாராயணு என்னும் நாமம் என்னவெல்லாம் தரும்?

''நம்பிக்கையோடு நாமத்தைப் பற்றுங்கள்.
நலமனைத்தும் தேடி வரும்.
நல்லோரின் உறவு வரும்.
குலம் விளங்கும்.
துயரங்கள் அனேத்தும் ஓயும்.
வானுலகம் கிடைக்கும்.
தாயினும் சாலப் பரிந்து, தன்னெளி செய்து காக்கும்.
பாடுங்கள் நாராயணு என்னும் நாமம்!''

என்று பேசுகிருர் திருமங்கையாழ்வார்.

குலம்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணு என்னும் நாமம்.

''பச்சைமாமலே போல் மேனி, பவளவாய் கமலச் செங்கண், அச்சுதா! அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்று பேசும் இந்தச் சுவையன்றி இந்திரலோகம் ஆளும் அந்தச் சுவையே கிட்டினும் நான் அதனே வேண்டேன்'' என்று பாடும் ஆழ்வாரின் வாக்கில் நாமமகிமை எவ்வளவு ரஸமும் செழிப்பும் கொண்டது என உணர முடிகிறது.



சாபத்திற்கு உட்பட்டு முக்தியை நாடி நின்ற பரீக்ஷித்துக்குப் பாகவதம் என்னும் பக்திப் பேரிலக்கியத்தை உபதேசித்த வியாசசுதர் சுகர் கலியுகத்தில் நாமஜபத்தின் ஆற்றலேச் சொல்வதாகப் பாகவதம் கீழ்க்கண்ட ச்லோகத்தைத் தருகிறது—

கலேர் தோஷநிதே ராஜந்நஸ்தி ஹ்யேகோ
மஹாந் குண: |
கீர்த்தநாதேவ க்ருஷ்ணஸ்ய முக்தஸங்க;
பரம் வ்ரஜேத் ||
க்ருதே யத் த்யாயதே விஷ்ணும் த்ரேதாயாம்
யஜதோ மகை: |
த்வாபரே பரிசர்யாயாம் கலௌ தத்தரி-
கீர்த்தநாத் ||

மாயையை ஜயித்து ஆத்மஞானத்தை அடைகிறவனே மாயையின் தோற்றத்தைப் பற்றியும் அழிவைப் பற்றியும் அறிந்தவன் ஆவான்.

—மோட்ச கீதை

இறைவனின் திருநாமத்தையும் லீலைகளையும் சொல்வதன் மூலமாகவே, கர்மத்தளைகளிலிருந்து ஒருவன் விடுதலை பெற்று இறையனுபூதி எய்தலாகும்.

சத்திய யுகத்தில் தியானத்தால் எய்தும் பயனும், துவாபர யுகத்தில் இறைவனுக்குச் செய்யும் தொண்டால் பெறும் பயனும், கலியுகத்தில் ஹரியின் நாமத்தை ஜபித்தலாலும், அவர் பெருமைகளைப் பேசுவதாலும் பெற்றுவிட முடியும்.

ஏ மனிதா! பாவமென்ற பெருநெருப்பைக் கண்டு அஞ்ச வேண்டாம்.

கோவிந்த நாமம் என்ற புயல் பொழியும் குளிர்ப் புனல் அதனை அணைத்துவிடும்.

பாபாநலஸ்ய தீப்தஸ்ய குர்வந்து ந பயம் நரா: |
கோவிந்தநாமமேகௌகைர் நச்யதே
நீரபிந்துபி:

என்று கருட புராணம் நாமமகிமை பற்றிப் பேசுகிறது.

''எத்தகைய பாவத்திற்கு உட்பட்டவனும், நம்பிக்கையோடு பகவானின் நாமத்தை இடைவிடாமல் உச்சரிப்பானேயானால் அவன் பாவங்கள் நசித்து நிச்சயம் இறைவனின் பாதங்களை அடைய முடியும்'' என்று வைசம்பாயன ஸம்ஹிதை சொல்லுகிறது.

உச்சரிக்கும் நாமத்தின் ஆற்றலில் நம்பிக்கை வைத்து, நாவாரப் பாடி, மனதாரச் சிந்தித்தால், நல்லறங்கள் நெஞ்சில் வளரத் துவங்கும்; சீலமுள்ள நல்ல வாழ்வு தானே வந்து அடையும்.

நாமத்தை நாமணக்கச் சொல்லும் பழக்கம் விடாமுயற்சியாலும் நம்பிக்கையாலும் சித்தி பெற்றுவிடுமானல், உடல், வினையாற்றுவதில் மூழ்கிக் கிடந்தாலும், நாவும் மனமும் இறைவன் நாமத்தைச் சொல்லிக்கொண்டே இருக்கும்.

நாமம், காமக் குரோதிகளால் அழுக்கான உள்ளத்தைத் தூய்மையாக்கி, நச்சு எண்ணங்கள் உட்புகுந்து கெடுக்காமல் தடுத்துக் காக்கும்.

பிறரைத் தூற்றப் புல்லறிவு மேலெழும்போது அதை மாற்றி அதே நாவால் பகவானின் நாமத்தை நம்பிக்கையோடு உடனடியாக உச்சரிக்க, உள்ளத்தின் களங்கமும் கறையும் ஒழிந்து நாமச்சுவையால் சாந்தியும் ஆனந்தமும் ஏற்படுவதைக் காண முடியும்.

'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி', சுந்தரனும் அரங்கனின் அருள்சுரக்கும் அழகு வெள்ளத்தில் மூழ்கித் திளைத்து, இறைவனின் நாமத்தைப் பாடுவதனல் விளையும் நலன்பற்றி,

வாயினுற் பாடி மனத்தினுல் சிந்திக்கப்
போய பிழையும், புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்

என்று விளக்குகிருள்.

குப்பையைக் கூட்டித் தள்ள வேண்டிய ஒருவன் அதை ஆராய்வதனல் எப்படிப் பயன் இல்லையோ, அப்படியே தன்னை அறிய வேண்டிய ஒருவன் தன்னை மறைத்துக்கொண்டிருக்கும் தத்துவங்கள் அனைத்தையும் சேர்த்துத் தள்ளிவிடாமல் அவை இத்தனை என்று கணக்கிடுவதனலும் அவற்றின் குணங்களை ஆராய்வதனலும் பயனில்லை. பிரபஞ்சத்தை ஒரு கனவு போல எண்ணிக்கொள்ள வேண்டும்.

—ரமண மகரிஷி

''புரிந்த பழைய பாவங்களும், இனி வரவிருக்கும் பாவங்களும்கூட தீயிலிட்ட தூசென அழியும்; இறைவனின் நாமத்தை வாயாரப் பாடி, மனதினுல் சிந்தித்து வாழ்த்துங்கள்'' என்று கூறுகிருள் ஆண்டாள்.

நம்மாழ்வாரும், ''கண்ணன் திருக்கழல்களைப் பற்றி உய்யும் விழைவுடையவராஞல் அவரது அமுதூறும் திருநாமம் 'நாராயண' என்ற நாமத்தைப் பாடுங்கள்'' என்று கூறுகிருர். அவர் பாடல் இது—

கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே.

ரிஷிகளும் சான்ருேர்களும் நம்பிக்கையோடும் அனுபவத்தோடும் சொன்ன நாம மகிமையில் சந்தேகப்பட்டு அதைப் புறக்கணிப்பவன் பெரும்பாவத்திற்கும் பேரிழப்புக்கும் ஆளாவான் என்பது ஆன்ருேர் மொழி.

ராம நாமத்தின்மீது பார்வதிக்கு உள்ள பக்தியைக் கண்டு மகிழ்ந்து சிவபெருமான் தம் ஒரு பாதியை அம்பிகைக்குக் கொடுத்து, அர்த்தநாரீசுவரர் ஆனுர்.

''ராமநாம மகிமையைச் சிவன் அறிந்திருந்த காரணத்தால் அவர் உண்ட ஆலகால விஷம் அமுதாக மாறியது'' என்று மகான் துளசிதாசர் கூறுகிருர்.

நாம் உண்ட சஞ்சித கர்மாக்கள் என்னும் தீவினை விஷமும், ராம ராம என்ருல் அழிந்து, அமுதத் தன்மையை நமக்கு நல்கிவிடும் என்பதில் ஐயப்பாடில்லை.

காசியில் இறப்போர்க்கு மோட்சம், சிவனுல் அவர்கள் செவிகளில் உச்சரிக்கப்படும் ராம நாமத்தால் சித்திக்கிறது.

''யானை தன்னைக் கட்டும்படித் தானே சங்கிலியை எடுத்துப் பாகனிடம் தருவது போல, பகவானும் தன்னைக் கட்டும்படி பக்தனுக்குத் தன் நாமத்தை அருளியிருக்கிருன்'' என்று வித்யாரண்ய சுவாமிகள் குறிப்பிடுகிருர்.

காம்யம் அல்லது கோரிக்கையோடு செய்யப்படும் நாமஜபம் நாம் விரும்பும் அனைத்தையும் நமக்கு அளித்து, மீண்டும் மீண்டும் ஜபிக்கும் போது தானுகவே கோரிக்கை கழன்று, கோவிந்தன் நாமச்சுவை மட்டுமே மிஞ்சி நிற்கும் நிலையொன்றும் வரும்.

அந்தச் சுவையில் ஊற ஊற, பெருக்கெடுக்கும் இறையன்பால் உலகியல் இச்சைகளை உதறித் தள்ளும் துணிவும் உறுதியும் நமக்கு வந்துவிடும். இது நாமஜபத்தால் சித்திக்கும் அரிய பேறே.

''கோவிந்தா என்ற என் நாமம்தான் திரௌபதியைக் காத்ததே தவிர நானல்ல'' என்று கண்ணன் சஞ்ஜயனிடம் சொன்னுனும்.

இறைவனே தன்னிலும் தன் நாமாவே உயர்ந்தது என்று சாசனம் செய்திருக்கிருன்.

'ஸம்சயாத்மா விநச்யதி—சந்தேகப்படுபவன் அழிகிருன்' என்பது பகவான் வாக்கு.

---

ஒருவன் எவ்வளவு அதிகமான சத்துக்கள் நிறைந்த உணவைத் தொடர்ந்து சாப்பிட்டாலும், நல்ல உடற்பயிற்சிகளில் நாள் தவருமல் ஈடுபட்டு வந்தாலும், மற்ற ஆரோக்கிய வழிகளையெல்லாம் முழுஅளவில் கடைப்பிடித்தாலும், கவலை, அச்சம், குற்ற உணர்வு, துயரம் போன்ற உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு ஆளாகியிருப்பானுனல் அவன் ஆயுட்காலம் மிகவும் குறைந்து அகாலத்திலேயே மரணம் அடைவான்.

—விஞ்ஞானச் சுடர்

---

ஆழ்ந்த நம்பிக்கையோடு, அனுதினமும் செய்யப்படும் நாமஜபம், அளவற்ற ஆற்றலையும் ஆத்மபலத்தையும் தமக்கு அளித்துக் காப்பதை அனுபவத்தில் உணரலாம்.

நாமஜபம் எத்தனை முறை செய்யப்பட்டது என்பதல்ல முக்கியம். எந்த அளவு நம்பிக்கை யோடும் பக்தி பாவனையோடும் ஜபிக்கப்பட்டது என்பதே நமது வெற்றியை நிர்ணயிக்கும்.

'அரைகுறை நம்பிக்கையோடு செய்யப்படும் நாமஜபமானாலும் அது தொடர்ந்து செய்யப்படு மானால் அதுவே நம்பிக்கையை வலுக்கச்செய்து, நிறைநிலையை அளித்துக் காக்கும்' என்பது ஆன்றோர் அனுபவத்தில் கண்டுணர்ந்த சத்தியம்.

''எவன் பகவானின் திருப்பெயரை நாவார உச்சரிக்கவில்லையோ, அவன் வாயில் மண்ணை அள்ளிப் போட வேண்டும்'' என்றாராம் கபீர்தாசர்.

''வேண்டாம், வேண்டாம்! அந்த மண் சாதுக்கள், மகான்கள் இவர்களின் பாதம் பட்ட பவித்திர தூளியாக இருக்கும்; அந்த மண் பட்டு அந்தப் பாவி நற்கதியடைந்துவிடுவான். பகவா னின் நாமத்தைச் சொல்லாத அவன் நா புழுத்துப் போகட்டும்'' என்று ஆவேசமாகப் பதில் சொன்னாராம் நாமதேவர்.

நாமஜபத்தாலும் சங்கீர்த்தனத்தாலும் தாமும் பரந்தாமனின் பாதங்களைப் பற்றி நின்று, தம்மை அண்டினவர்க்கும் அதையே உய்யும் வழியாகக் காட்டிய மகான்கள் எத்தனையோ பேர்.

கபீர்தாசரும் குரு நானக்கும் நாமஜபத்தில் ஊறித் திளைத்த மகான்கள்.

ஏகநாதரும் துகாராமும் தமது பாட்டால், பஜனையால் பாமர மக்களையும் பக்திப் பெருக்கில் குளிப்பாட்டி எடுத்தவர்கள்.

ஞானதேவரும் சோபானதேவரும் புரந்தர விட்டலனின் புண்ணியக் கீர்த்தனையால் பூமியைப் புனிதம் செய்தவர்கள்.

மீராபாயும் ஸுர்தாசரும் ஹரிநாமத்தால், அவனது குணங்களைச் சொல்லும் அரிய சங்கீர்த்தனத்தால் பக்தி உலகத்தையே தாலாட்டிய பெருமக்கள்.

ராமதாசரும் துளசிதாசரும் ராமநாமப் பிரபா வத்தை நாமணக்கச் சொல்லி, நாமநாதத்தால் ராமபாதத்தைப் பற்றிய சான்றோர்கள்.

இப்படி எத்தனையோ மகான்களைக் கோடிட்டுக் காட்ட முடியும்; உதாரணமாக எடுத்துப்பேச முடியும்.

[தொடரும்]

## மனம் என்ற யானை



கை கால்களை அசைக்காமலும், வாயினால் பேசாமலும், காதினால் கேட்காமலும், கண்ணினால் பார்க்காமலும், மூக்கினால் மோக்காமலும் இருந்துவிட்டாலும், மனம் உள்ளே வேலை செய்துகொண்டிருக்கிறது. அது சும்மா இருப்பதில்லை.

ஓர் யானையைப் பாகன் கட்டி ஓர் இடத்தில் நிறுத்திவிடுகிறான். ஆனாலும், அது துதிக்கையை மட்டும் சும்மா வைத்திருப்பதில்லை. துதிக்கையைப் பல பக்கங்களிலும் வீசிக்கொண்டேயிருக்கும். அதற்காகப் பாகன் என்ன செய்கிறானென்றால் துதிக்கையில் ஓர் சங்கிலியைக் கொடுத்துவிடுகிறான். அதனால் ஆட்டம் நின்றுவிடுகிறது.

அதே போன்று பல விஷயங்களிலும் பாய்ந்து திரியும் மனதையும் கடவுள் சிந்தனையில் நிறுத்தும்போது நிலைபெற்றுவிடுகிறது. ஜீவாத்மா பரமாத்மாவில் கலந்துவிடுகிறது. சும்மா இருக்கிற நிலை ஏற்பட்டுவிடுகிறது.

—ஞானானந்தர்




# சும்மா இரு!

த. காவேரி

தேவகிரி என்ற ஊரில் ஒரு சிறிய சிவாலயம் இருந்தது. அது நன்கு பராமரிக்கப்பட்டு வந்தது. ஒரு பூசாரி, இரண்டு உதவியாளர்கள், ஒரு நிர்வாக அதிகாரி ஆகியோர் அந்தக் கோவிலில் வேலை பார்த்து வந்தனர். நிர்வாக அதிகாரி அன்பானவர்; ஆனால் மிகவும் கண்டிப்பானவர்.

ஒரு நாள் சாது ஒருவர் இந்தக் கோவிலுக்கு வந்தார். அவர் அங்கேயே இரண்டு மூன்று நாட்கள் தங்கினார். நிர்வாக அதிகாரி, 'பாவம்! சாமியார் ஒன்றும் சாப்பிடவில்லையே!' என்று நினைத்தார். ஆகவே அவர், ''சுவாமி, தாங்கள் மூன்று நாளாக ஒன்றுமே சாப்பிடாமல் இருக்கிறீர்களே! கோவிலிலிருந்து பட்டைச்சாதம் கொண்டு வந்து தருகிறேன்; சாப்பிடுகிறீர்களா?'' என்று வினவினார்.

சாது பதில் ஒன்றும் பேசவில்லை. எனினும் நிர்வாக அதிகாரி கோவிலிலிருந்து பட்டைச்சாதம் கொண்டு வந்து சாதுவிடம் கொடுத்தார். சாது அதைப் பசித்துச் சாப்பிட்டார். அதைக் கண்ட நிர்வாக அதிகாரிக்கு ஆனந்தமாக இருந்தது. எனவே அவர் அன்றைய தினத்திலிருந்து தினந்தோறும் கோவிலிலிருந்து அந்தச் சாதுவுக்குப் பட்டைச்சாதம் கொடுத்து வந்தார். அது கணக்கில் இல்லாமல் போகக் கூடாது என்பதற்காகக் கணக்குப் புத்தகத்தில் 'சும்மா இருக்கிற சாமியாருக்குப் பட்டைச் சாதம் ஒன்று' என்று எழுதி வந்தார்.

ஒரு நாள் கோவிலின் உயர் அதிகாரி ஒருவர் எல்லாவற்றையும் பார்வையிடுவதற்கு வந்தார். அவர் கணக்குப் புத்தகங்களையும் பார்த்தார். அப்போது அவர் கணக்குப் புத்தகத்தின் எல்லாப் பக்கங்களிலும், 'சும்மா இருக்கிற சாமியாருக்குப் பட்டைச்சாதம் ஒன்று' என்று ஒவ்வொரு நாளும் எழுதியிருந்ததைக் கவனித்தார். ''சும்மா இருக்கிற சாமியாருக்குத் தினமும் ஒரு பட்டைச்சாதம் ஏன் தரவேண்டும்? இனிமேல் அவருக்குப் பட்டைச் சாதம் கொடுக்கக் கூடாது'' என்று அந்த உயர் அதிகாரி உத்தரவிட்டுச் சென்றார்.

மறுநாள் நிர்வாக அதிகாரி மேலிடத்திலிருந்து பிறந்த ஆணையைச் சாதுவிடம் தெரிவித்தார். சாதுவுக்குப் பட்டைச்சாதம் தர முடியாத நிலை ஏற்பட்டதைக் குறித்து நிர்வாக அதிகாரி வருந்தினார். ஆனால் அந்தச் சாது தாம் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை.

சில நாள் கழிந்தன. உயர் அதிகாரி மீண்டும் அந்தக் கோவிலுக்கு வந்தார். அவர் சாதுவிடம் சென்று, ''ஓய் சாமியாரே! நீ இங்கே சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கக் கூடாது. கோவில் நந்தவனத்தில் வேலை நிறைய இருக்கிறது. நீ அங்கே வேலை செய்தால் சாதம் கிடைக்கும்'' என்றார்.

அதற்குச் சாது பதில் பேசவில்லை. எனவே மீண்டும் கோபம் கொண்ட அதிகாரி, ''இங்கே பட்டினி கிடந்து சாகக்கூடாது. வேலை செய்ய விருப்பம் இல்லாவிட்டால் இடத்தைக் காலி பண்ண வேண்டும்'' என்று கத்தினார்.

சுவாமிஜி சிரித்துக்கொண்டே உயர் அதிகாரியிடம், ''சும்மா இருந்தால் சாதம் கிடையாதா?'' என்று கேட்டார். அதிகாரி, ''சும்மா இருப்பவனுக்கு எதற்குச் சாதம்? சோம்பேறிகள்'' என்று திட்டினார்.

சுவாமிஜி அதிகாரியிடம், ''அப்படியென்றால் உன்னால் சும்மா இருக்க முடியுமா?'' என வினவினார்.

உடனே உயர் அதிகாரி, ''சும்மா இருப்பது என்ன ஒரு பெரிய வேலையா?'' என்று ஏளனமாகக் கேட்டார்.

அதற்குச் சாது, ''சரி, அப்படியானால் சும்மா இருந்து காட்டு, பார்ப்போம்'' என்றார்.

உயர் அதிகாரி சுவாமிஜியின் அருகில் உட்கார்ந்தார். சுவாமிஜி அதிகாரியின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தார். அதிகாரி கோபப்பட்டார். சுவாமிஜி, ''உன்னைச் சும்மாதானே இருக்கச் சொன்னேன்? ஆபீசில் கையெழுத்துப் போட வேண்டுமென்றால் அதையெல்லாம் இப்போது நினைக்கக் கூடாது'' என்றார்.

அதிகாரி, ''அப்படியா? சரி'' என்று உட்கார்ந்தார்.

மறுபடியும் உயர் அதிகாரியின் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. அதிகாரி காரணம் கேட்டார்.

சுவாமிஜி, ''ஆசாரியிடம் நகை செய்யக் கொடுத்திருந்தால் அதையெல்லாம் இங்கே நினைக்கக் கூடாது. சும்மா இருக்க வேண்டும்'' என்றார்.

இப்போதுதான் சும்மா இருப்பது என்றால் என்ன என்பது அதிகாரிக்குப் புரிய ஆரம்பித்தது. அவர் எழுந்து சாதுவை வணங்கிவிட்டு, ''சுவாமிஜி! சும்மா இருக்கிற வேலை மிகப் பெரிய வேலை. என்னால் ஒரு நிமிஷம்கூடச் சும்மா இருக்க முடியாது'' என்று கூறினார்.

பிறகு உயர் அதிகாரி கோவிலின் நிர்வாக அதிகாரியை அழைத்து, ''இன்றையிலிருந்து சும்மா இருக்கிற சுவாமிஜிக்குப் பட்டைச்சாதம் இரண்டு எனப் போட்டுக்கொள்ளுங்கள். சும்மா இருப்பது பெரிய வேலை; சாமானியமான வேலை இல்லை'' என்று கூறினார்.

ஞானிக்கு உலக விஷயங்கள் இரவு. இறை அனுபவமே பட்டப்பகல். நாமும் நம் மனதை இறைவனிடம் நிறுத்தப் பாடுபடுவோமாக!



# 'தத்த்வமஸி'—மகாவாக்கியத்தின் விளக்கம்

## ஆதிசங்கரரின் வாக்யவ்ருத்தி

வி. ஆர். கணேசன்

உபநிஷதங்களில் மகத்தான தத்துவங்களைப் பற்றிக் கூறும்பொழுது ரிஷிகள் சுருக்கமான வாக்கியங்களால் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மா வுக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றிச் சொல்லி யிருக்கிறார்கள். ஊக்கத்துடன் கேட்கும் தகுதி பெற்ற மாணவனுக்கு இவற்றின் விளக்கத்தை யும் தெளிவாக உரைத்துள்ளார்கள்.

இவ்வாறு நான்கு வேதங்களுக்கும் பிரசித்த மான நான்கு மகாவாக்கியங்களில் 'தத்த்வ-மஸி' என்ற மிகச் சுருக்கமான வாக்கியம் சாமவேதத்தைச் சேர்ந்த சாந்தோக்ய உபநிஷதத்தில் வருகிறது.

இந்த மகாவாக்கியத்தை உபதேச வாக்கியம் என்றும் விவரிப்பதுண்டு.

'த்வம்-நீ, தத்-அதுவாக, அஸி-இருக்கிறாய்' என்று அர்த்தம். அதாவது நம்முள் இருக்கும் ஜீவாத்மாவும் பரமாத்மாவாகிய மெய்ப் பொருளும் வேறுபட்டதல்ல என்பதை இது குறிக்கிறது.

குருகுலவாசம் செய்து பன்னிரண்டு வருஷம் கழித்துத் திரும்பி வந்த மகன் சுவேதகேதுவைத் தகப்பனான உத்தாலக ஆருணி கேட்கிறார், ''நீ பன்னிரண்டு வருஷம் குருவினிடம் எல்லா வேதங்களையும் கற்று வந்தேன் என்று சொல் கிறாயே; எந்த ஞானத்தால் கேட்க முடியாததைக் கேட்போமோ, அறிய முடியாததை அறி வோமோ, பார்க்க முடியாததைப் பார்ப்போமோ, அந்த ஞானத்தைக் கற்றுக்கொண்டாயா?'' என்று.

''அப்படி ஒரு வித்யை இருக்கிறது என்றே தெரியாது. தெரிந்திருந்தால் எங்கள் குரு கட்டாயம் எங்களுக்கு உரைத்திருப்பார். அந்த வித்யை என்ன என்று நீங்களே எனக்குச் சொல்லிக் கொடுங்கள்'' என்று மகன் பதில் சொல்கிறான்.

உத்தாலக ஆருணி, ''அதுதான் பிரம்ம வித்யை அல்லது ஆத்மஞானம் என்பது. அதை அறிவதனால் வேறொன்றையும் அறிவதற்கு அவசியமே இல்லை, எல்லாம் அறிந்தவரா கிறோம்'' என்று சொல்லி, மேலும் பற்பல உதாரணங்களால், ''எல்லாவற்றிலும் பரவி யிருப்பதும், எல்லாவற்றிற்கும் ஆதாரமானது மான பரம்பொருள்தான் ஆத்மா. அது நீயேதான். தத்த்வமஸி என்று அறிவாய்'' என்று உரைக்கிறார்.

உபநிஷதத்தில் சுருக்கமாகக் கூறியுள்ள இந்த மூன்றே பதங்கள் கொண்ட மகாவாக்கியத்தின் தத்துவத்தை நன்கு உணர்ந்து கேட்டுச் சிந்தித்துத் தியானம் செய்வதன் மூலம் முழுப் பலனையும் பெறுவதற் காகவே ஆதிசங்கரர் இதன் பொருளைத் தெளிவாக 'வாக்யவ்ருத்தி' என்ற நூலில் விவரித்துள்ளார்.



இந்த நூலிலும், ஆதிசங்கரர், உபநிஷதங்களில் உள்ளது போன்ற குரு சிஷ்ய உரையாடல் முறையைக் கைக்கொண்டிருக்கிறார்.

சாதன சதுஷ்டயம் என்ற சொல்லப்படும்—விவேக, வைராக்கிய, சமாதி ஷட்சம்பத்து, முமுட்சுத்வம் என்ற நான்கு வகைப்பட்ட தகுதி களையும் பெற்ற மாணவன் ஒருவன் மூவிதத்* துன்பங்களினாலும் கஷ்டப்பட்டு, குருவை

---

* ஆத்யாத்மிக (தனக்குள்ளிருந்து உண்டா கும்), ஆதிபௌதிக (வெளிப் பொருள்களால் உண்டாகும்), ஆதிதைவத (தெய்வங்களால் உண்டாகும்) இன்னல்கள்.

இந்த உலகப் பொருள்களின் பின் செல்லாதீர்கள். அவை உங்கள் சக்தியை விணாக்கி, மனஉறுதியைப் பலவீனமாக்குகின்றன.

—கீதைச் சிந்தனை

அணுகிக் கேட்கிறான்—''ஐயனே, இந்த வாழ்க்கையின் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து தப்புவதற்கு ஏதேனும் ஒரு சுலபமான வழியை மனமருளிச் சுருக்கமாக எனக்கு உரைக்க வேண்டும்'' என்று.

குரு முதலில், 'த்வம்—நீ' என்ற பதத்திற்குப் பொருள் கூறுகிறார். பிறகு 'தத்—அது' என்ற பதத்தை விளக்குகிறார். கடைசியாக இந்த இரண்டு பதங்களும் 'அஸி—இருக்கிறாய்' என்ற பதத்தோடு சேர்ந்து அந்த வாக்கியத்தின் பொருள் என்ன ஆகிறது என்பதையும் கூறுகிறார்.



இந்த மூன்று பதங்கள் சேர்ந்த வாக்கியத்தின் வாச்யார்த்தத்துக்கும் லக்ஷ்யார்த்தத்துக்கும் உள்ள வித்தியாசத்தையும் (அதாவது வார்த்தைகளின் கோவையாலான வாக்கியத்தின் வெளிப்படையான அர்த்தத்தையும் உட்கருத்தை ஆராய்ந்து பார்க்கும் பொழுது புலப்படும் பொருளையும்) தெளிவாக விளக்கம் கூறி முடிக்கிறார்.

குரு சொல்லுகிறார்— ''உனது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் கூடிய அந்தக்கரணத்தில் மாறி மாறி நிகழும் செயல்களுக்கெல்லாம் சாட்சியான, அந்த நித்தியமான, உணர்வு மயமான, ஆனந்தம் கூடிய சச்சிதானந்தரூபமாக நீயே இருக்கிறாய் என்று ஏன் அறிந்து கொள்ளவில்லை?

''தேக இந்திரியப் பிராணன்கள், மனது, புத்தி இவற்றின் சம்பந்தத்தால் 'இவையே நான்' என்ற அறியாமையாலாகிய தவறான நினைவை உடனே தவிர்த்து, 'மெய்யுணர்வாகிய ஆத்மாவே நான், புத்தியின் செயற்பாடுகளுக்கெல்லாம் நித்திய சாட்சியாகவும் இருக்கிறேன்' என்று இடைவிடாத தியானத்தில் ஈடுபடுவாய்.

''மேலும், எவ்வாறு மண்ணாலாகிய குடத்துக்கு உருவம் நிறம் என்றெல்லாம் இருக்கின்றனவோ அவ்வாறே உருவத்துடனும் பெயருடனும் கூடிய இந்த உடல் ஆத்மாவாகாது. ஏனெனில், குடத்தைப் போலவே உடலும், ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி என்ற பஞ்ச பூதங்களால் உண்டான வஸ்துதான் என்று அறிந்து கொள்வாய்.

''ஒரு வஸ்துவை நாம் பார்க்கும்பொழுது பார்க்கும் பொருள் (object) வேறு, பார்ப்பவன் (subject) வேறு என்று இருக்கிறது அல்லவா?

''அதே மாதிரி, எந்தப் பொருள்களைப் புலன்களால் நாம் அறிகிறோமோ, அந்தப் பொருள்கள் வேறு, பார்ப்பவரான நாம் வேறு என்று தெளிவாகிறது. இவ்வாறு 'நான்' இந்திரியங்களினின்றும் வேறுபட்டவன் என்று ஆகிறது அல்லவா?

''மனதையும் புத்தியையும் பிராணன்களையும் கூட 'நான்' அறிகிறேன். ஆகையால் 'நான்' இவற்றினின்றும் வேறுபட்டவனாகியிருக்கிறேன். அதாவது, உடல் இந்திரியங்கள் கூடிய ஸ்தூல சரீரத்தினின்றும், மனம், புத்தி முதலிய சூட்சும சரீரம் என்று சொல்லப்படும் சரீரத்தினின்றும் 'நான்' (subject) வேறு என்று உணர்ந்து கொள்வாய்.

''மேலும் சிந்தித்தால், இந்த இரண்டு சரீரங்களும் சேர்ந்து செயற்படுவதையும் 'நான்' அறிகிறேனாதலால் இந்த இரண்டின் சேர்க்கையிலிருந்தும் 'நான்' வேறுபட்டவன் என்றும் அறிந்துகொள்.

''இந்த ஸ்தூல சூட்சும சரீரங்களும் எந்தச் சக்தியால் இயங்குகின்றன என்று சிந்தனைசெய்து ஆராய்ந்து பார்த்தால், 'நான்' என்பவன் உள்ளே இருப்பதனால்தான் உடலும் இந்திரியங்களும் அந்தக்கரணமும் உயிர்பெற்று இந்த உலகப் பொருள்களில் வேண்டுவனவற்றையெல்லாம் ஏற்றுக்கொண்டும், வேண்டாத

வற்றைத் தவிர்த்தும் செயற்படுகின்றன என்றும் அறிந்துகொள்வாய்.

''காந்தமானது (magnet) இரும்புத் தூள்களை எங்ஙனம் இழுத்தும் பரப்பியும் பல விதமான சலனத்துக்கு உள்ளாக்குகிறதோ, எப்படி நெருப்பு இரும்பைச் சூடுபடுத்திச் சிவந்து கணகணவென்று நெருப்பே ஆனது போல் காணச் செய்கிறதோ, அது போலவே இயல்பி லேயே ஜடமாகிற தேக இந்திரிய புத்திப் பிராணன்களையும் உள்ளிருந்துகொண்டே உயிர் பெற்று, இயங்கச் செய்து உயிர் உள்ளன போல் சலனமாக்குகிற அந்த ஆத்மாதான் 'நான்' என்று அறிந்துகொள்வாய்.

''இவ்வாறு இந்திரியங்கள் முதலியவற்றை இயங்கச் செய்தும், இந்த ஆத்மா ஒருவித மாறுபாடும் அடைவதில்லை என்பதையும் அறிந்து கொள்வாய்.

'' 'என் மனது எங்கெங்கோ சென்றிருந்தது. இப்பொழுது திருப்பிக் கொண்டு வரப்பட்டு அமைதியடைந்திருக்கிறது' என்ற நினைவைப் புத்தியில் எது பிரகாசிக்கச் செய்கிறதோ அந்த உணர்வாகிய ஆத்மா 'நான்' என்று அறிந்து கொள்வாய். அதே உணர்வுதான் மாறுதலற்றுக் கனவு, விழிப்பு, ஆழ்ந்த நித்திரை என்ற இந்த மூன்று நிலைகளிலும் பிரகாசித்துக்கொண்டு கனவு விழிப்பு நிலைகளில் நினைவுகள் உண்டாவதையும், நித்திரையில் நினைவுகள் மறைவதையும் அறிகிறது என்றும் தெரிந்து கொள்.

''ஒரு வஸ்து இருப்பதை எப்படிச் சூரியனின் ஒளியினுலோ, சந்திரனின் வெளிச்சத்தாலோ, அல்லது விளக்கின் வெளிச்சத்தாலோ அறிகிருேமோ, அதுமாதிரி வேதாந்தத்தில் புலன்களாலும் மனேபுத்தியாலும் அறியப்படும் பொருள்கள் உள்ளிருக்கும் உணர்வாகிய ஆத்மாவினுல் பிரகாசிக்கப்படுகின்றன என்று கூறுவது முறை. இதனுல், பிரகாசிக்கப்படும் பொருள் பிரகாசிக்கச் செய்பவனின்றும் வேறு பட்டது என்பதும் தெளிவாகிறது அல்லவா?

''உதாரணமாக, குடத்தைப் பிரகாசிக்கச் செய்யும் விளக்கு, குடத்தினின்றும் எங்ஙனம் வேறுபட்டதோ, அவ்வாறே தேக இந்திரிய மனே புத்திப் பிராணன்களைப் பிரகாசிக்கச் செய்யும் உணர்வுமயமாகிய ஆத்மாவான 'நான்' இவற்றினின்றும் வேறுபட்டவன் என்று அறிந்து கொள்வாய்.

''மனைவி, புத்திரர், செல்வம்—இவை எதனுல் எனக்குப் பிரியமானவை என்று ஆலோசித்தால், 'நான்' என்னும் ஜீவாத்மாவின் பொருட்டே அவை பிரியமானவை என்று தெரியவரும். ஏனெனில், அவர்களின் நலம் எனக்கு இன்பத்தைக் கொடுக்கிறது. அதே மாதிரி, செல்வமும் இன்பத்தைக் கொடுக்கிறது.

''உண்மையில் மனைவி மக்கள் செல்வம் ஆகிய எல்லாவற்றையும்விட நான் என்னையே மிகவும் நேசிக்கிறேன் என்ற நிலையில், அந்த நான் ஜீவாத்மாவேதான் என்றும் உணரலாம். அதனுல்தான் கவலையுற்றிருக்கும்பொழுது, 'நான் என்றும் இல்லாமலிருக்கக் கூடாது; என்றென்றும் ஜீவித்திருக்க வேண்டும்' என்றெல்லாம் எண்ணங்கள் உண்டாகின்றன.

''மேலே கூறிய விளக்கத்தினுல் 'த்வம்—நீ' என்ற பதம் சாதாரணமாக அவித்யையால் ஆகிய தேக இந்திரிய மனே புத்தி முதலியவற்றுடன் உலக விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் ஜீவாத்மாவைக் குறிக்கிறது என்றும், ஆனுல் ச்ரவண மனன நிதித்யாசனத்தால் அந்தப் பதத்தின் லக்ஷ்யார்த்தம் அறியப்படுகிறது என்றும் தெளிவாகிறது.

''அதாவது, 'நான் யார்?' என்னும் ஆத்ம விசாரத்தால், தூய அறிவானது தேக இந்திரிய மனே புத்திப் பிராணன்களுக்கு அப்பால் சாட்சி போல் இருந்துகொண்டு மாறுபடாத ஆத்மாவின் பிரகாசத்தால் அறியப்படும் சக்தி என்றும் தெரிய வரும்.

''மேலும், எண்ணங்களெல்லாம் அறவே ஒழிந்த தருணத்தில் அந்த அமைதியில் சாட்சித் தன்மைக்கும் இடமில்லை என்று ஏற்படுகிறது. அந்த உண்மையான தன்னிலையில் அந்தத் தூய மெய்யுணர்வுதான் எஞ்சுகிறது. அதுதான் 'சுயம்பிரகாசமான ஆத்மா—த்வம்-நீ' என்று அறிந்துகொள்வாய்.''

மேற்கொண்டு 'வாக்யவ்ருத்தி'யில் ஆதிசங்கரர் கூறும் கருத்துக்களை அடுத்த இதழில் பார்க்கப் போகிருேம்.

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்: இல்லறத்தாராகிய பக்தர் ஒருவருக்கு ஒரு முறை ஓர் அரிய அனுபவம் ஏற்பட்டது. அவர் அன்றைய தினம் ஏராளமாகக் குடித்து, உணர்ச்சிகள் மிகவும் தூண்டப்பட்டிருந்தார். தமது வண்டியை அவப்பெயருக்கு இடமான ஒரு வீட்டின் முன் நிறுத்தி அதன் மாடிக்குச் சென்றார். படிக்கட்டின் உச்சியில் ஸ்ரீராமகிருஷ்ணர் நின்று கொண்டிருக்கக் கண்டார். அப்படியே வெட்கி அந்த வீட்டிலிருந்தே ஓடிவிட்டார். இறைவனே நம்மைக் காப்பாற்றினாலன்றி நாம் தப்புவதற்கு வழியில்லை.

தமது மனதில் தீய போக்குகளே இல்லாதவர் அதாவது இறைவனாலேயே காக்கப்படுபவர் பாக்கியசாலிகள். அவர்கள் மட்டுமே மீட்சியளிக்கப்படுபவர்கள். சுய முயற்சியால் எவரும் இதிலிருந்து தப்ப முடியாது. ஆயினும் ஸ்ரீராமகிருஷ்ணர், ''நீ உண்மையாகவே ஈடுபாடு கொண்டிருந்தாயானால் அம்பிகை அனைத்தையும் சரிசெய்வாள்'' என்று சொல்வது வழக்கம்.

உண்மையான ஈடுபாடு இருந்தாக வேண்டும். ஏதோ ஒருவிதமாக இருப்பதாகச் சொல்லிக் கொண்டு வேறு விதமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தால் பயன் ஏற்படாது. மற்றவருக்கு முன் நீ தூய்மையானவனாகத் தோன்றலாம்; ஆனால் உனக்கு நீயே கண்ணைக் கட்டி ஏமாற்ற முடியாது. உனக்கு நீயே சாட்சி. ஆகையால் உன் முழு இதயத்தோடு நீ ஆண்டவனிடம் பிரார்த்தித்துக்கொண்டால் அவன் செவிசாய்க்காமல் இருக்க முடியாது.— என்னுடைய இந்த வாக்கைப் பிரமாணமாக எடுத்துக்கொள்.

ஆனால் நீ வேஷதாரியாக இருக்கக்கூடாது. ''அப்படிப்பட்டவன் பொறியிலே சிக்கிக்கொள்ள இடம் கொடுத்துவிட்டுப் பின்பு தன் விதிக்காகப் புலம்புவான்'' என்று சுவாமிஜி (விவேகானந்தர்) சொல்வார்.

காரியத்தைச் செய்துவிட்டுப் பிற்பாடு புலம்பி என்ன பயன்? தீரனாக, 'இனி ஒருபோதும் இதைச் செய்யமாட்டேன்' என்று சொல். அப்போதுதான் ஆண்டவன் உனக்குத் துணை வருவான்.

உணர்ச்சிக்கு வசமாகிவிடுகிறவனைவிட இழிந்த ஜந்து எதுவும் இல்லை. இவன் எப்பேர்ப்பட்ட அகௌரவங்களுக்குத் தன்னையே ஆளாக்கிக் கொள்கிறான்! இதன் ஆதிக்கத்திற்குத் தப்பியதற்காக நீ பிறந்த வேளையை வாழ்த்திக் கொள். அறிவாற்றல் பெற்றுத் தலைமை ஸ்தானம் அடைந்தவர்கூட இதற்கு அடி பணிந்துவிடுகிறார்கள்.



சுவாமி துரியானந்தர்

மனைவியால் மிகவும் அடக்கியாளப்பட்ட ஓர் அரசனைப் பற்றிக் கதை உண்டு. ஒரு நாள் நண்பன் ஒருவன் அவனுடைய இந்தப் பலவீனத்தைச் சுட்டிக் காட்டினான். அன்றையிலிருந்து அவன் தன்னைத் திருத்திக்கொள்ள முயன்றான். அந்தப்புரத்திற்குச் சென்றான். ஆனால் அவசிய விஷயம் தவிர ராணியிடம் எதுவும் பேசவில்லை. முகத்தைக் கடுமையாக

வைத்துக்கொண்டிருந்தான். ராணி அனைத்தையும் புரிந்துகொண்டாள். அரசன் உணவு உட்கொள்ளும் சமயத்தில் அவனுடைய கலத்தில் இருந்த உணவுகளை ராணியின் வளர்ப்புப் பூனை கொரிக்கலாயிற்று. அவன் அந்தப் பிராணியை விரட்ட முயன்றுகொண்டிருந்தான். ஆனால் அது வெளியேறுவதாக இல்லை. இதன் பிறகு ராணி, அந்தப் பிராணிக்கு ஏற்கனவே வேண்டிய அளவு செல்லம் கொடுத்தாகிவிட்டது என்பதை அரசனுக்கு நினைவுபடுத்திவிட்டு, எனவே இப்போது அதை அடித்து விரட்டுவதற்கில்லை என்று எடுத்துக்காட்டினாள்.

முன்னரே சீராட்டி வளர்த்துவிட்ட விஷ நோயை விரட்ட முடியாது. முதலிலிருந்தே ஒருவன் தன் கையில் லகானைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அதை ஒருபோதும் தளர விடாமல் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் குணமாவதற்கு உரிய நம்பிக்கையே இல்லாததாகத்தான் விவகாரம் இருக்கும்.

'ஒன்றைப் பற்றிக்கொள்வதற்கும் அதே போல விடுவதற்கும் எந்த நிமிஷமும் தயாராக இருக்க வேண்டும்' என்று சுவாமிஜி கூறுவது வழக்கம். நாம் ஒரு வேலையை மேற்கொள்கிறோம்; உடனே அதைப் பற்றிக்கொண்டவர்களாகி விடுகிறோம்; நம்மால் அதிலிருந்து விடுவித்துக் கொள்ள முடிவதில்லை. இவ்வாறு இருக்கக் கூடாது. சங்கல்பமாத்திரத்தில் துறப்பதற்கான சக்தி, அனைத்தையும் பின்னே தள்ளிவிடுவதற்கான சக்தி, நமக்கு இருக்க வேண்டும்; ஏனெனில் உண்மையில் எதுவும் நம் உடைமை யல்ல.

ஸ்ரீராமகிருஷ்ணரைப் பாருங்கள்! தட்சிணேசுவரத்தை விட்டு ஹ்ருதய் போய்விட வேண்டும் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. தர்வான் வந்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''நீங்கள் இந்த இடத்தை விட்டுச் செல்ல வேண்டியதாக இருக்கிறது'' என்றான்.

''என்ன சொன்னாய்? நான் அல்ல, ஹ்ருதய்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் மறுமொழி கூறினார். அந்த ஆளோ, ''இல்லை, எங்கள் எஜமான் உங்கள் இருவரையும்தான் போக வேண்டும் என உத்தரவிட்டிருக்கிறார்'' என்றான். இது பிரச்னையை முடித்துவிட்டது. அவர் பாதரக்ஷையைப் போட்டுக்கொண்டு வாசலுக்குக் கிளம்பிவிட்டார்.

திரைலோக்கிய பாபு கச்சேரி அறையிலிருந்து இதைப் பார்த்துவிட்டு ஓடிச்சென்று குருதேவர் காலில் விழுந்தார். ''ஐயனே! நீங்கள் ஏன் போகிறீர்கள்? உங்களை நான் வெளியேறச் சொல்லவில்லையே!'' என்றார். உடனே ஒரு வார்த்தை சொல்லாமல் குருமகராஜ் திரும்பி வந்தார். பாருங்களேன், அவர் விட்டு விலகியதில் துளிக்கூடத் துவேஷ உணர்ச்சி இல்லாமலிருந்திருக்கிறது.

நாமோ நாம் செய்கிற காரியங்களில் எவ்வளவு புழுதி எழுப்புகிறோம்! நாம் குருதேவர் ஸ்தானத்தில் இருந்திருந்தால் அந்தத் திரைலோக்கிய பாபு*விடம் ஆத்திரத்தைக் கொட்டியிருப்போம். ஆனால் குருமகராஜ் ஏதும் சொன்னாரில்லை; வெளியேற எவ்வளவு தயாராக இருந்தாரோ அப்படியே உள்ளே திரும்பவும் தயாராக இருந்தார். குருதேவர் கோணல்மாணலாக உடை அணிவார். எந்த அளவுக்கென்றால், ஒரு நாள் ஒருவர் அவரைத் தோட்ட வேலையாள் என்று தப்பாக நினைத்து, தமக்காக அவரை ஒரு ரோஜா பறித்துவரச் சொல்லிவிட்டார். அவரும் உடனே அந்த வேலையைச் செய்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு அந்த மனிதருக்கே தாம் செய்த தவறு தெரிந்துவிட்டது. மன்னிப்பு வேண்டிக் குழறினார். ஸ்ரீராமகிருஷ்ணரோ, ''இதில் தவறே எதுவும் இல்லை. எந்த உபகாரமானாலும் ஒருவர் கேட்டால் அதை எப்பொழுதும் செய்து உதவத்தானே வேண்டும்!'' என்று சொல்லி விட்டார். உன்னதமாக இருக்கிறதல்லவா?

இதேபோல், சுவாமிஜியையும்பாருங்கள். அவர் அனைத்தையும் தம் சீடர்களுக்குத் தராமல் தமது குருபாயிகளுக்கே (தம்மோடு சகோதரர்களாக, ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சீடர்களாக இருந்தவர்களுக்கே)† அளித்தார். ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் ஆரம்பகாலத் தர்மகர்த்தர்களில் நீங்கள் அவரது குருபாயிகளையே காண்பீர்கள். அவரது சீடர் ஒருவரைக்கூடக் காணமாட்டீர்கள்.

மடத்திற்குச் சம்பந்தப்படாத தனிப்பட்ட ஒரு நிதிக் காணிக்கையிலேயே தம்முடைய வாழ்க்கைச் செலவுகளைச் செய்து சுவாமிஜி வாழ்ந்தார். ஏனெனில், அவரே சொன்னாற்

---

* தட்சிணேச்வர ஆலயத்தை நிறுவிய ராணி ராசமணியின் பேரர்.

† துரியானந்தரும் இந்த குருபாயிகளுள் ஒருவராவார்.

போல், அவர் சகலத்தையும் தத்தம் செய்து விட்டார். ஒரு சமயம் அவர், ''எல்லா வற்றையும் உங்களுக்குத் தந்துவிட்டேன். ஆகையால் நான் நிம்மதியாக இருக்கிறேன்'' என்று எனக்கு எழுதினுர். எத்தகைய அற்புத மான மனிதர் அவர்!

மேல்நாடுகளுக்கு நீங்கள் சென்றிருந்தால் உங்களுக்கு அவருடைய செல்வாக்கின் சக்தி தெரிந்திருக்கும். அவரே சொல்வது வழக்கம்: ''மேல்நாடுகளில்தான் என் பணி அதிகமாக நடக்கும்; பிறகு அதுவே இந்தியாவின் மீது பிரதிபலிக்கும்'' என்று.

ஒரு நாள் அவர் மிகவும் சலிப்புற்றவராக, ''கச்சேரி முழுவதையும் நானே தனி ஆளாக நடத்த வேண்டியிருப்பதாகக் காண்கிறேன். எவரும் எனக்கு உதவிசெய்யாமல் நானே பாடிக் கொண்டும், பக்க வாத்தியங்கள் வாசித்துக் கொண்டும், மற்ற எல்லாமும் செய்துகொண்டும் இருக்க வேண்டியுள்ளது'' என்ருர்.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஏராளமாக விஷய ஞானம் உண்டு. கிரீஷ் பாபு ஒரு முறை அவரிடம், ''நீங்கள் எல்லா அம்சங்களிலும் என்னேவிடப் பெரியவர் — தீய விஷயங்களில் கூடத்தான்'' என்ருர்.

அதற்கு, குருதேவர், ''இல்லே, இல்லே, இது அப்படி இல்லே. இதில் (அதாவது தம்மிடத்தில்) சம்ஸ்காரங்கள் (முன்வினேச் சுவடுகள்) எவையும் இல்லே. (முன்வினேயின்) பிரத்தியட்சமான அனுபவத்தால் ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்வதற்கும் அதையே (வினேயாகச் செய்யாமல்) படித்து ஆராய்ந்தும், பார்த்தும் மாத்திரமே தெரிந்துகொள்வதற்கும் இடையே உலகளவு வித்தியாசம் இருக்கிறது. அனுபவ மானது மனதில் முத்திரையைப் பதிப்பித்து விடுகிறது. இவற்றிலிருந்து விடுபடுவது மிகவும் சிரமம். படிப்பு ஆராய்ச்சியிஞலும் பார்த்து அறிவதனுலும் பெறும் ஞானத்தின் சமாசாரம் இப்படியல்ல'' என்ருர். ❋

---

## கண்ணன் குறும்பு

ராமானந்தன்

பெரியாழ்வார் தமது பாசுரங்களில் கண்ணனின் லீலேகளே எத்தனே எத்தனேயோ விதங்களில் அனுபவித்துப் பாடியுள்ளார். அவற்றில் ஒன்று கீழே தரப்பெறுகிறது. யசோதையிடம் கண்ணனேப்பற்றி ஒருத்தி புகார் கொடுக்கிருள்—

நற்குணங்கள் நிரம்பப்பெற்ற குணபூர்ணேயான யசோதாய்! ஏதோ நான் சொல்வதில் உனக்குக் கோபம் வரும். ஆனுல் நடந்ததைத்தான் நான் உனக்குக் கூறுகிறேன், கேட்பாயாக.

உன் பிள்ளே கண்ணன் மிகவும் சூழ்ச்சி உடையவன். அவன் என் வீட்டில் புகுந்து என் பெண்ணே அழைத்தான். அவளிடம் அவன் நயமாகப் பேசி அவளுடைய கைவளேகளேக் கழற்றிக்கொண்டான்.

பிறகு அந்தக் கைவளேகளே எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குச் சென்ருன். தோட்டத்தின் பக்கமாக யாரோ ஒருத்தி நாவல்பழங்களே விற்றுக்கொண்டிருந்திருக்கிருள். அவளிடம் சென்று உன் மகன் என் பெண்ணுடைய கைவளேகளேக் கொடுத்து நாவல்பழங்களே வாங்கினுன்.

நான் அவனேக் கையும் களவுமாகப் பிடித்து விசாரித்தேன். அவனே தன் கையிலேயே பழங்களே வைத்துக்கொண்டு, ''நான் ஒன்றும் செய்யவே இல்லே; எனக்கு ஒன்றும் தெரியாது; உன் மகளே செய்திருப்பாள்'' என்று பயம் ஏதும் இல்லாமல் சிரிக்கவும் சிரிக்கிருன்.



சொல்லிலரிசப் படுதி நங்காய்
  சூழலுடைய உன் பிள்ளேதானே
இல்லம் புகுந்து என் மகளேக் கூவிக்
  கையில் வளேயைக் கழற்றிக்கொண்டு
கொல்லேயினின்றும் கொணர்ந்து விற்ற
  அங்கொருத்திக்கு அவ் வளே கொடுத்து
நல்லன நாவற்பழங்கள் கொண்டு
  நானல்லேன் என்று சிரிக்கின்ருனே.

—பெரியாழ்வார் திருமொழி, 2-9-10

# அருள்நெறிக் கதை

## அன்னதான மகிமை

சுவாமி கமலாத்மானந்தர்

ஓர் அரசன் முக்தி பெற வேண்டும் என்று பெரிதும் விரும்பினான். ஆனால் அது நிறைவேறாத வகையில் தனக்குக் கர்மவினை மிகுந்திருப்பதை அவன் உணர்ந்தான்.

எனவே அவன் தன் குலகுருவை அணுகி, ''சுவாமி! என் கர்மவினை தீர்ந்து விரைவில் நான் முக்தி பெற வேண்டும். அதற்குத் தாங்கள்தாம் ஒரு வழி சொல்ல வேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

குலகுரு, ''அரசனே! உன் நாட்டின் நான்கு திசைகளிலும் அன்ன சத்திரங்களை அமைத்து அன்னதானம் நடைபெறச் செய். உன் பாவ வினைகளெல்லாம் உன்னை விட்டு அகன்று ஓடிவிடும்'' என்று கூறினார்.

அரசனும் அவ்விதமே செய்தான். அதன் பயனாகக் கர்மவினைகளிலிருந்து விடுபட்டு முக்தி பெற்றான்.

மேலே பார்த்த ஹிந்துமதக் கதை அன்னதானத்தின் சிறப்பை விளக்குகிறது.

* • •

அன்னதானம் மிகச் சிறந்த புண்ணியச் செயலாகும். அதிலும் மகான்களுக்கும் சிறந்த பக்தர்களுக்கும் உணவளிப்பதைப் புண்ணியத்திலும் புண்ணியம் என்று சொல்லலாம். இந்த உண்மையைப் பின்வரும் கதை விளக்குகிறது—

தர்மபுத்திரர் ராஜசூய யாகம் நடத்தினார். அந்த யாகத்தில் கலந்துகொண்ட லட்சக் கணக்கான மக்களுக்கு அறுசுவை விருந்து பரிமாறப்பட்டது.

அவ்விதம் தாராளமாக அன்னதானம் நடைபெற்ற இடத்தில் ஒரு தெய்விக மணி தொங்க விடப்பட்டிருந்தது. அதன் கீழே சற்றுத் தள்ளி, பதிவு ஏட்டுப் புத்தகத்துடன் ஒருவன் அமர்த்தப் பட்டிருந்தான்.



ஒரு லட்சம் பேர் சாப்பிட்டதும் அந்த மணி தானாகவே ஒரு தடவை அடித்துக்கொள்ளும். மணி அடித்ததைக் கேட்டதும் அதன் அருகில் கணக்கு எழுதுவதற்கு அமர்ந்துள்ள மனிதன், மணிச்சப்தம் ஒலித்ததைக் குறித்துக்கொள்வான்.

இவ்விதம் ஒரு நாளில் எத்தனை தடவை மணி அடிக்கிறதோ, அதைக் கொண்டு எத்தனை லட்சம் பேர் அன்றைய தினம் சாப்பிட்டார்கள் என்பதைக் கணக்கிட்டுத் தெரிந்துகொள்வது வழக்கம்.

ஒரு நாள் வழக்கத்திற்கு மாறாக டாண்டாண் என்று மணி வேகவேகமாகத் தொடர்ந்து அடிக்க

ஆரம்பித்தது. கணக்கு எழுதுபவன் பதிவேட்டில் மணிச் சப்தத்தை வேகவேகமாகக் குறித்துக் கொள்ள ஆரம்பித்தான். ஆனால் அவனாலும் குறித்துக்கொள்ள இயலாத அளவுக்குப் பலமாக மணி அடித்துக் கொண்டது. மணியின் வேகத்திற்கு ஈடுகொடுத்து மணியோசையின் எண்ணிக்கையைப் பதிவேட்டில் குறித்துக்கொள் வதற்கு அவன் திணறினான்.

சற்று நேரத்தில் அடித்துக்கொண்டிருந்த மணி கனவேகமாகத் தொடர்ந்து அடித்ததைத் தாங்க மாட்டாமல் கட்டியிருந்த கயிற்றை அறுத்துக் கொண்டு கீழே விழுந்தது.

என்றைக்கும் இல்லாத புதுமையாக மணி அறுந்து விழுந்ததைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டார்கள். மேலும், 'ஒரு லட்சம் பேர் சாப்பிட்டால்தான் மணி ஒரு தடவை அடிக்க வேண்டும். அவ்வளவு குறுகிய காலத் தில், ஒரு சில விநாடிகளுக்குள் பல லட்சம் மக்கள் சாப்பிட்டிருப்பதும் சாத்தியமே இல்லையே! தெய்விக மணி தவறு செய்யாதே. அப்படி யானால் இத்தனை முறை மணி அடித்ததற்கு என்னதான் காரணம்?' என்று குழுமியிருந்த மக்கள் ஒருவருக்கு ஒருவர் வியப்போடு பேசிக் கொண்டார்கள்.

பிறகு விசாரித்தபோது ஓர் உண்மை தெரிய வந்தது.

ஒரு நாடோடி அன்னதானம் நடைபெறும் இடத்திற்கு வந்திருந்தார். அவர் எச்சில் இலைகளைப் போடும் இடத்திற்கு நேராகச் சென்று சில சோற்றுப் பருக்கைகளை எடுத்து வாயில் போட்டுக்கொண்டார் என்ற விவரம் தெரிய வந்தது.

பிறகு அந்த நாடோடி யார் என்று ஆராய்ந்த போது, அவரே வியாசரின் புதல்வரான சுகதேவர் என்ற உண்மை புலனாயிற்று.

பரமஞானியான சுகதேவர் பாண்டவர்களைக் கௌரவிப்பதற்காகவே அன்னதானம் நடை பெற்ற இடத்திற்கு வந்து சில சோற்றுப் பருக்கைகளைக் கொறித்துவிட்டு அமைதியாகச் சென்றுவிட்டார். அவர் விருந்து நடைபெறும் இடத்தில்கூட நுழையவில்லை. எச்சில் இலையிலிருந்து சில சோற்றுப் பருக்கைகளை மட்டும் எடுத்து வாயில் போட்டுக்கொண்டார்.

சுகதேவர் உட்கொண்ட அந்த அற்ப அளவு உணவு பல லட்சோபலட்சம் மக்கள் உணவு உட்கொண்டதற்குச் சமம் ஆகும். எனவேதான் தெய்விகமணி பல முறை அடித்துக்கொண்டது. அது மட்டுமின்றி, எண்ணிக்கை காட்ட இயலாத அளவிற்கு மணி அறுந்து விழுந்ததிலிருந்து, சுகதேவர் அங்கே அன்னம் உட்கொண்டது, கணக்கிடவே இயலாத வகையில் எண்ணற்ற மக்களுக்கு உணவளித்ததற்கு நிகராக விளங்கி யிருக்கிறது என்பது தெரிய வந்தது. இந்த உண்மைகளை அறிந்த போது மக்கள் பெரிதும் வியப்படைந்தார்கள்.

இந்தக் கர்ண பரம்பரைக் கதை, சுகப் பிரம்மத்தின் ஆன்மிக மகத்துவத்தையும் தெளிவாக உணர்த்துகிறது. ●

---

# தத்துவத் துளிகள்

முயற்சியுடையவன் செல்வத்தை அடைகிறான்; நல்ல உணவு உண்பவன் ஆரோக்கியத்தை அடைகிறான். ஆரோக்கியத்தை யுடையவன் சுகத்தை அடைகிறான். உறுதியுள்ளவன் கல்வியில் வல்லவன் ஆகிறான். நல்ல பழக்கமுள்ளவன் ஒழுக்கம், புகழ், செல்வம் இவற்றை அடைகிறான்.

மனச்சோர்வு மகிழ்ச்சியைக் கொல்லும். இளவேனிலின் அழகைப் பனிக்காலம் கெடுத்து விடும். சூரியன் இருளை அகற்றும். செய்ந்நன்றி மறத்தல் நன்மைக்குத் தடையாகிறது. விரும்பியது கிடைத்தால் கவலை நீங்குகிறது. நல்லொழுக்கத்தால் துயரங்கள் அழிகின்றன. தப்பான நடத்தை யால் பெருஞ் செல்வமும் அழிந்துபோகிறது.

திறமை இல்லாதவனுக்குச் சாஸ்திர அறிவு பயன்படாது; இரண்டு கண்களும் இல்லாத வனுக்கு, விளக்குப் பயன்படாது.

சிறியவர்கள் சிறிய காரியத்தைத் தொடங்கிப் பெரிதும் குழப்பம் அடைவார்கள். பெரியவர்கள் பெரிய காரியங்களைத் தொடங்கிச் சித்தம் கலங்காமல் உறுதியாக இருப்பார்கள்.

—ஹிதோபதேசம்

---

# என்னை உடையான்

கி. வா. ஜகந்நாதன்

இறைவனுக்கு உடையான் என்பது ஒரு பெயர். எல்லாவற்றையும் தன் உடைமையாக உடையவன் ஆதலின் அந்தப் பெயர் வந்தது. வடமொழியில் ஸ்வாமி என்று வழங்கும் திருநாமமும் அந்தப் பொருளுடையதே.

எல்லாவற்றுக்கும் ஸ்வாமியாக இருக்கும் அவனை எல்லோரும் அவ்வாறு உணர்வதில்லை. பிரமன், இந்திரன் முதலிய பெரிய தேவர்கள் கூடத் தாங்களே எல்லாவற்றுக்கும் சொந்தக்காரர்கள் என்று எண்ணி இறுமாப்பு அடைவதுண்டு. ஆனுல் அடியவர்கள், அவனே எல்லாவற்றையும் உடையவன் என்றும், தமக்கும் அவனே உடையவன் என்றும், 'நாம் அரன் உடைமை' என்றும் எண்ணுவார்கள். பொருளை உடையவன் அதனைப் பாதுகாப்பது போல இறைவன் தம்மைப் பாதுகாத்தருள்வதாக உணர்வார்கள். இந்தக் கருத்தை நினைக்கிருர் காரைக்கால் அம்மையார்.

**என்னை உடையானும்**

வெவ்வேறு குழுவிற்கு வெவ்வேறு தலைவர்கள் இருப்பார்கள். அமரர் குழுவுக்கு இந்திரன் தலைவன். சத்தியலோகத்தில் உள்ளவர்களுக்குப் பிரமன் தலைவன். உலகத்தில் பல பல நாடுகளில் உள்ளவர்களுக்கு அந்த அந்த நாட்டின் அரசன் தலைவன்.

இவ்வாறு வேறுபட்ட குழுக்களுக்கு வெவ்வேறு தலைவர்கள் இருந்தாலும், எல்லாத் தலைவர்களுக்கும் மேலான தலைவன் ஒருவன். சிறு சிறு நாடுகளுக்கு ஆட்சி புரியும் மன்னர்கள் வெவ்வேருக இருந்தாலும் எல்லா மன்னர்களுக்கும் மேலாக மன்னர் மன்னனுகிய சக்ரவர்த்தி இருப்பது போல அந்தத் தலைவன் இருக்கிருன். பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள் படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில்களை இயற்றும் தலைவர்கள். அவர்களை மும் முதல் என்று சொல்வார்கள். அந்த அந்தத் தொழிலை இயற்றும் அளவில் அவர்கள் முதல்வர்களாக இருந்தாலும் எல்லாருக்கும் மேலாக முதல்வனுக இருப்பவன் ஒருவன்தான்.

ஒரு பெரிய காரியாலயத்தில் ஒவ்வொரு பிரிவிற்கும் ஒவ்வொரு தலைவர் இருப்பார். காரியாலயம் முழுமைக்கும் ஒரு தனித் தலைவர் இருப்பார். அது போன்ற நிலை இது.

அது மட்டும் அன்று. கீழே உள்ள தலைவர்கள் தங்கள் ஆட்சிக்காலம் முடிந்தவுடன் போய்விடுவார்கள். வேறு தலைவர்கள் வருவார்கள்.

''நூறு கோடி பிரமர்கள் நுங்கினுர்'' என்று பாடுவார் அப்பர்.

கீழுள்ள தலைவர்கள் இப்படிக் காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டிருந்தாலும் மேலுள்ள தனித் தலைவனுகிய சிவபெருமான் என்றும் மாருமல் நிலைத்து நிற்பவன். தான் ஒருவனே தனித் தலைவனுக என்றும் நிலையாக இருப்பவன் அவன்.



**ஏகமாய் நின்ருனும்**

அவனுடைய கல்யாண குணங்கள் பல. அவனுடைய அருள் வெளிப்படும்போது அந்தக் குணங்கள் சமயத்துக்கு ஏற்ப வெளிப்படும். அவனுக்கே தன்னுடைய தன்மை முழுவதும் தெரியாதாம். அடியார்கள் கண்டு கண்டு வியந்து பாராட்டும்போது அவற்றை நாம் தெரிந்துகொள்கிருேம்.

**"உன்னை நீதானும் உணராதாய்"**

**என்று சகாதேவன் கண்ணனைப் பார்த்துச்**

சொல்வதாகப் பாரதத்தில் வருகிறது, அதுபோல அம்மையார்,

தன்னை அறியாத தன்மையனும்

என்று சொல்கிறார்.

அப்படி உள்ளவன் யார்? நுட்பமாகச் சொன்னார் முதலில். என்னை உடையான் என்றும், ஏகமாய் நின்றான் என்றும், தன்னை அறியாத தன்மையன் என்றும் சொல்லிவிட்டு அவனை இனம் கண்டுகொள்வதற்கு அடையாளம் காட்டுகிறார்.

அவனுடைய சடையைப்பற்றிச் சொல்கிறார். போன பாட்டில், 'திரைமருவு செஞ்சடையான்' என்று சொன்னவர் அந்த எண்ணத்தோடே பேசுகிறார். அங்கே 'செஞ்சடையான்' என்று மட்டும் சொன்னார். இங்கே சற்று விளக்கமாகச் சொல்கிறார்.

அது செம்பொன்னைப் போல ஒளிர்கிறது. செம்பொன்னைச் சுருள் சுருளாக வைத்தால் எப்படி இருக்கும்? அப்படி அவனுடைய தூய சடை தோற்றம் அளிக்கிறது.

பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான்.

அந்தச் சடையைத் 'தூச்சடை' என்கிறார். அகங்கரித்து வந்த கங்கையின் அகங்காரத்தைப் போக்கித் தூயதாக்கிய சடை அது. சாபமேற்ற சந்திரனைத் தூயவனாக்கிப் புனைந்த சடை அது. ஆகவே தூய சடையாயிற்று.

அவன் வானவர்களுக்கு அருள் பாலிக்கிறான். அவர்கள் தன் அருளைப் பெற்றுத் தம் தம் கடமைகளை முறையாக ஆற்றும்படி செய்கிறான். தன்னுடைய அருளை அவர்களுக்கு ஆகும்படி திருவுள்ளங் கொண்டு வைக்கிறவன் அவன். அவர்கள் அடியவர்களைப் போலச் சிறந்த தகுதியைப் பெறாவிட்டாலும் உலகம் நடைபெறுவதற்காக அவர்கள் தம் தொழிலைச் செய்ய வேண்டுமாதலின் அவர்களுக்குத் தன் அருளைத் துணையாக வைத்திருக்கிறான். அடியவர்கள் குழந்தை போன்றவர்கள். அவர்களிடத்தில் இயல்பாக இறைவனுக்கு அன்பு சுரக்கிறது. அவர்களைத் தன் உடைமையாகக் கொண்டு ஆளுகிறான். ஆனால் தேவர்களை, மேலதிகாரி தன் கீழுள்ள அதிகாரிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வேலை வாங்குவது போல, அருள் தந்து தம் கடமைகளை ஆற்றச் செய்கிறான்.

என்னை உடையானும்
  ஏகமாய் நின்றானும்
தன்னை அறியாத
  தன்மையனும்—பொன்னைச்
சுருளாகச் செய்தனைய
  தூச்சடையான், வானோர்க்கு
அருள்ஆக வைத்த அவன்.

என்னை உடைமையாக உடைய ஸ்வாமியும், தானே தனித் தலைவனாக நின்றவனும், தன்னையே தான் அறியாத இயல்புள்ளவனும், செம்பொன்னைச் சுருளாகச் செய்தாற் போன்ற தூய சடையவனாகிய, தேவர்களுக்கு அருள் உண்டாகும்படியாக அந்தச் சிவபெருமான்.

[உடைமைக்குச் சுதந்திரம் இல்லை. உடையவன் அதை எப்படி வேண்டுமானாலும் ஆளலாம். அப்படிச் சர்வ சுதந்திரனாகிய இறைவனுடைய திருவுள்ளப்படி இயங்குபவர்கள் அடியவர்கள். அதனால், 'என்னை உடையானும்' என்றார். மற்ற எல்லாப் பொருள்களும் தானேயாய் நிற்பவனாதலின் உயர்திணையாகச் சொல்லாமல் ஏகம் என்று அஃறிணையாற் சொன்னார். நின்றான் - தன் தலைமை நிலைமை மாறாமல் என்றும் நிலைத்து நின்றவன்; நின்றான் என்பது இறந்த காலத்தால் சொன்னாலும் கால வழுவமைதியால் முக்காலத்துக்கும் பொருந்தும். பொன் என்றது இங்கே செம்பொன்னை. செய்தனைய—செய்தாலனைய; விகாரம்.

உடையானும், நின்றானும், தன்மையனும் சடையான், அவன் என்று முடிக்க.]

இறைவனுடைய தனித் தலைமையைச் சொன்னது இந்தப் பாட்டு.

இது அற்புதத் திருவந்தாதியில் 92-ஆவது பாட்டு.

△

# துளசிதாசரின் பிரார்த்தனை

திரட்டும் தமிழும்: எஸ். பி. ராஜகுமாரி

1. ரகுநாதா! தலைவனே! வேறு வழியின்றி ஒரு முறை உன்னைக் கூப்பிட்டாலும் உடனே துன்புற்றவர்களுக்கு எந்தக் கரங்களால் அபயம் அளித்தாயோ அந்தத் தாமரைக் கரங்களை என் மீதும் வைப்பாயாக.

கிருபை புரிபவனே! எந்தத் தாமரைக் கரங்களால் சிவபெருமானின் வலிமை வாய்ந்த வில்லை ஒடித்து ஜனக மன்னனின் கவலையை நீக்கினாயோ, படகோட்டியைச் சகோதரனாக நினைத்து அரவணைத்துக் கொண்டாயோ, ஜடாயுவுக்குப் பிண்டம் அளித்து மோட்சத்திற்கு அனுப்பினாயோ அந்தத் தாமரைக் கரங்களை என் தலைமீதும் வைத்து என்னை ஆசீர்வதிப்பாயாக.

தொண்டனின் நன்மைக்காக எந்தத் தாமரைக் கரங்களால் வாலியை வதைத்துச் சுக்கிரீவனை அரசனாக ஆக்கினாயோ, பயத்துடன் சரணடைந்த விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தாயோ, அசுரர்களை அழித்துத் தேவர்களுக்கு அபயம் அளித்தாயோ அந்தச் சுகம் தர வல்ல தாமரைக் கரங்களைத் துளசிதாசனாகிய என் தலைமீதும் வைப்பாயாக.

குளிர்ச்சி பொருந்திய எந்த உன் தாமரைமலர்க் கரத்தின் நிழல் பாவம், தாபம், மாயை ஆகியவற்றை அழித்துவிடுகிறதோ அந்தத் தாமரைக் கரங்களின் நிழலையே இரவும் பகலும் துளசிதாசனாகிய எனக்கும் அளிப்பாயாக.

2. இறைவனே! இன்று காலையிலிருந்தே உன் வாசலில் நின்று நான் கெஞ்சிக்கொண்டிருக்கிறேன். ஒரு கவளம் உணவு கிடைத்தாலே எனக்குப் போதும். வேறு எதுவும் எனக்கு வேண்டாம். (உன் கடைக்கண் பார்வை என் மீது பட்டாலே என் ஆசை முழுவதும் நிறைவேறி விடும்.)

தாங்க முடியாத அளவுக்குப் பயங்கரப் பஞ்சத்தின் உருவமாகக் கலிகாலம் இருக்கிறது. இந்தக் கலியுகத்தில் எல்லா உபாயங்களும் சாதனங்களும் கெடுதி விளைவிப்பனவாகவே இருக்கின்றன.

தீயவரின் சேர்க்கையால் மனமும் ஐம்புலன்களின் செய்கைகளும் கெட்டுவிட்டன. தாழ்ந்த மனிதனின் மனதிலுள்ள ஆசை நிச்சயமாகக் குஷ்டரோகிக்கு அரிப்பெடுப்பதைப் போன்று இருக்கிறது.

(குஷ்டரோகிக்குத் தன் புண்களைச் சொறிந்து விட்டதே சற்று நேரத்திற்குப் பிறகு மேலும் அதிகத் துன்பத்தைத் தரும். அது போலவே சிற்றின்பமும் சிறிது நேரம் இன்பத்தைத் தந்து, முடிவில் பெருந்துன்பத்துக்குக் காரணமாகி விடும்.)

என் நிலையைக் கண்டு எனக்கே பயம் ஏற்பட்டது. ஆதலால் கருணை வடிவமான சாதுக்களின் மண்டலிக்குச் சென்று, அங்கே என்னைப் போன்றவர்களைக் காப்பாற்றுவதற்கு யாராவது இருக்கிறார்களா என்று விசாரித்தேன்.



சாதுக்கள், ''கோசலபதி ஸ்ரீராமர் இருக்கிறார்'' என்று பதில் அளித்தார்கள்.

கருணைக்கடலே! உன்னைத் தவிர வேறு யாரால் வறுமையையும் இன்னலையும் நீக்க முடியும்?

தசரதகுமாரனே! வீரர்கள் மற்றும் வள்ளல்களின் சிரோமணியே! ஏழைகளைக் காப்பவனே! நான் பிறந்ததிலிருந்தே பசியுடன் இருக்கும் பிச்சைக்காரன். போதும், இப்போது (பிறப்பிலிருந்தே பசியுடன் இருக்கும்) துளசிதாசனாகிய எனக்குப் பக்தி என்ற அமுது போன்ற நல்ல உணவை அளிப்பாயாக; வயிறு நிறையச் சாப்பிடச் செய்வாயாக.

3. தலைவனே! நான் ஓர் ஏழை. இரவும் பகலும் உன் கருணையையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

தீனதயாளா! உனது கிருபை எப்போது எனக்குக் கிடைக்கும் என்று தெரியவில்லை.

பாவத்தின் மொத்த உருவமாகவும் இழிந்த குணங்களின் இருப்பிடமாகவும் கலிகாலம் விளங்குகிறது.

கலிகாலத்தைக் கண்டவுடனே நற்குணம், ஞானம், வைராக்கியம், பக்தி, நல்ல சாதனங்கள் ஆகியவை யாவும் வருத்தமடைந்து ஓடிவிட்டன.

அளவற்ற அநியாயங்கள், தீய பழக்க வழக்கம் ஆகியவை காரணமாக இந்தப் பூமி சூரியனை விட அதிக வெப்பம் அடைந்துவிட்டிருக்கிறது.

தலைவனே! என்னை உனக்கு அர்ப்பிக்கிறேன். நான் வேறு எங்கே போவேன்? எங்கும் தங்குவதற்கு இடம் இல்லை. என் புத்தி பேதலித்துவிட்டது.

தந்தையே! என் உடலும் என் வசமாக இல்லை. எல்லாக் கொடுமைகளாலும் தீய பழக்கங்களாலும் துளசிதாசன் என்ற நெல்வயல் பிளவுபட்டுக் காய்ந்து கொண்டிருக்கிறது. அதை, கரிய மேகமான நீ, கருணை என்ற மழையைப் பொழிந்து செழிப்படையச் செய்வாயாக.

4. ரகுவீரா! என்ன, எப்பொழுதாவது கருணையுடன் என் பக்கம் பார்ப்பாயா?

தயாநிதியே! நான் நல்லவனோ தீயவனோ எப்படி இருந்தாலும், என்னையும் உன் சேவகனாக நினைத்து என் குற்றங்களுக்கு முடிவுகட்டுவாயா?

எண்ணற்ற பிறவிகளில் இந்த மனம் என்னை வெற்றி கண்டிருக்கிறது; என்மீது தன் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்திருக்கிறது. ஆனால் இப்போது என்னை ஜயிக்கச் செய்வாயா? என் மனதை நான் வெல்ல முடியுமா? நீ இவ்வாறு செய்தால் நான் நல்ல தலைவனைப் பெற்று விடுவேன்.

ஆம், நீ என் அற்பத்தனத்தைக் கண்டு பயப்படாமலிருந்தால் (அப்படிப் பயப்படக் காரணமில்லை), நீயும் அநாதரட்சகனாக ஆகி விடுவாய். என் துக்கத்தைக் கண்டு பயப்படாமல் என்னை நீ உன்னுடையவனாக ஆக்கிக்கொண்டா யானால் உனக்கு அநாதரட்சகன் என்ற பெயர் நிலைத்துவிடும்.

நீ எனக்குப் பெருநன்மையைச் செய்பவன் தான். எனினும் பயத்தினால்தான் காரணமின்றி உன்னிடம் வேண்டுகோள் விடுத்துக்கொண்டிருக் கிறேன்.

துளசிதாசனாகிய என்னால் வேறு யாரிடம் போய் என் குறைகளைச் சொல்லிக்கொள்ள முடியும்? ஏனெனில் என் தலைவன், குரு, தாய், தந்தை, மற்றும் எனக்கு எல்லாமாகவும் இருப்பவன் நீதான்.



## திருடன் திருந்தினான்

நாடோடி

சைதன்யரின் காலத்தில் கதாதரபட்டர் என்ற ஒரு பெரிய மகான் இருந்தார். ஒரு நாள் இரவு அவரது வீட்டிற்குள் திருடன் புகுந்து எல்லாச் சாமான்களையும் ஒரு பெரிய கோணிப் பையில் மூட்டையாகக் கட்டினான். கோணிப்பை மிகவும் பளுவாக இருந்ததனால் அவனால் அந்த மூட்டையைத் தூக்க முடியவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் அவன் திகைத்துக்கொண்டிருந்தபோது பட்டர் விழித்துக்கொண்டார். திருடன் படும் கஷ்டத்தைப் பார்த்து மனமிளகி, ''நான் வேண்டு மானால் உன்னோடு சேர்ந்து மூட்டையைத் தூக்கி உன் தலையில் வைக்கட்டுமா?'' என்று கேட்டார். பட்டரைக் கண்டதும் திருடன் ஓட ஆரம்பித்தான்.

உடனே பட்டர் அவனை நிறுத்தி, ''ஏன் பயப்படுகிறாய்? உனக்குத் தேவையாக இருப்ப தனால்தானே இந்த நள்ளிரவில் இத்தனை கஷ்டப்பட்டு உள்ளே நுழைந்திருக்கிறாய்? ஆகவே இந்த மூட்டையை எடுத்துக்கொண்டு போ'' என்றார்.

திருடன் திகைத்தான். மூட்டையை எடுத்துக்கொண்டு போக மறுத்தான். ஆனால் பட்டர் வற்புறுத்திச் சொல்லவே, அவன் மூட்டையை எடுத்துக்கொண்டு போனான்.

ஆனால் அடுத்த நாள் காலையே அவன் மூட்டையுடன் வந்து, பட்டர் காலில் விழுந்தான். உங்கள் நல்ல குணம் என்னை மாற்றிவிட்டது. ''இனி நான் திருடமாட்டேன்'' என்று சொல்லி, தன் தவற்றுக்கு மன்னிப்புக் கேட்டான். அன்றையிலிருந்து அவன் நல்ல வழிக்குத் திரும்பினான்.

# காளிதாசரின் கவி நலம்

**தி. வேங்கடகிருஷ்ணன்**

உலகப் பெருமொழிகளில் ஒன்ருகிய வட மொழி என்று தமிழ்மொழியில் வழங்கப்படும் சம்ஸ்கிருதம் மிகவும் தொன்மையானது. அதன் இலக்கியம் ஈடுஇணையற்றதாக இலங்குகிறது.

ஒவ்வொரு மொழியின் இலக்கியப் படைப் பாளர்களுள் ஒருவர் ஏனையோரைவிடத் தலை சிறந்து நிற்கிருர். எடுத்துக்காட்டாக, ஆங்கில இலக்கியத்தில் ஷேக்ஸ்பியரும், தமிழில் கம்பரும், ஹிந்தியில் துளசிதாசரும் அந்த மொழிகளில் சிறந்தவர்களாகப் போற்றப் பெறுகிருர்கள். அவ்வாறே வடமொழி இலக்கியத்தில் காளி தாசரும் தனிப்பட்ட சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளார்.

இவ்வாறு காளிதாசர் தனிப்பட்ட சிறப்பான இடத்தைப் பெறுவதற்கு, அவருடைய கவிதை களில் காணும் சொற்செறிவும் பொருள் நயமும் அணிகளின் அமைப்பும் ஓசைச் சிறப்பும் காரணங்களாகும்.

காளிதாசருடைய உவமை நயம் மிகவும் சிறப்பாகப் பாராட்டப்பெறுகிறது. ஆனல் உவமைகளைக் கையாள்வதில் மட்டுமே அவ ருடைய திறமை பளிச்சிடுகிறது என்பதில்லை. வேற்றுப்பொருள்வைப்பு அணியிலும் அவருடைய புலமை வியத்தகு முறையில் வெளிப்படுகிறது. இயற்கை வருணனையிலும், நவரசங்களை உரிய முறையில் வெளிப்படுத்துவதிலும் அவருடைய கவிவண்ணம் கவினுற இலங்குகிறது. சில காட்சிகளை இங்கே காண்போம்.

'குமார சம்பவம்' என்ற காவியத்தில், பார்வதிக்குப் படிக்கும் பருவம் வந்ததும், அவளுக்கு உபதேசிக்கப்பெற்ற வித்யைகள் அனைத்தும், முற்பிறப்பிலேயே அவளுக்குத் தெரிந்திருந்ததனல், அவை அவளை எளிதில் அடைந்து விளங்கின என்று கூறுகிருர். இந்த வித்யைகள் முன்பே அவளிடம் இருந்தவை. இப்பொழுது, ஏற்ற காலம் வந்ததும், தாமாக அவளை அடைந்து விளங்கின என்று சொல்வ தற்கு எடுத்துக்காட்டாக இரண்டு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகிருர் காளிதாசர்.

ஒன்று-இமயமலையின் அடிவாரத்தில் கங்கை யில் தங்கி வாழும் அன்னப்பறவைகள் கோடை யில் அவ்விடத்தை விட்டகன்று மலையின் மேற் பகுதிக்குச் சென்றுவிட்டுச் சரத்காலம் வந்ததும் மறுபடியும் பழைய இடத்தையே வந்து அடை கின்றன.

மற்றென்று-இமயமலையிலுள்ள மூலிகைகளிற் சிலவற்றுள் ஒருவகை ஒளி உள்ளது. அது ரேடியம் போன்று இருட்டில் தானுக ஒளிரும் தன்மை வாய்ந்தது. இந்த ஒளி பகற்பொழுதில் கதிரவனின் ஒளிமுன் காணப்படாமல் மறைந்து கிடந்து இரவு வந்ததும் அந்தச் செடிகளிடத்தி லேயே வெளிப்படுகிறது.



முதல் உவமையில், சரத்காலம் வரும்வரை மறைந்திருந்த அன்னங்கள், அதன்பின் மீண்டும் கங்கையை வந்தடைகின்றன. இவ்வாறே பார்வதியின் முற்பிறப்புக் கல்வி மறைந்திருந்து இந்தப் பிறப்பில் கற்கத் தொடங்கியதும் அவளை அடைந்து சிறப்பாக விளங்கியது என்று கொள்ள வேண்டும்.

இரண்டாவது உவமையில், ஏற்கனவே மறைந்து கிடந்த ஒளி, இரவு வந்ததும் தானுக அந்தச் செடியில் வெளிப்படுகிறது. இவ்வாறே பார்வதியின் முற்பிறவிக் கல்வி இந்தப் பிறவியில் கற்கும் காலம் வரும்வரை மறைந்திருந்து அது வந்ததும் அவளிடம் நன்ருக வெளிப்பட்டது என்று உவமேயத்தை அழகுறப் புரிய வைக்கிருர் கவிஞர்.

இனிக் காளிதாசருடைய நாடகங்களில் 'சாகுந்தலம்' மிகவும் சிறந்த நாடகமெனக்

கொண்டாடப்பெறுகிறது. அதில், வேட்டை யாட வந்த துஷ்யந்த மன்னன் கண்வமுனிவரின் ஆசிரமத்தில் இயற்கையான சூழ்நிலையில் சகுந்தலையைக் காண்கிறான். அவள் ஆசிரமத் தினர் உடுத்தும் மரவுரியையே அணிந்திருக் கிறாள். பகட்டான பட்டாடை அணியவில்லை. ஆனால் அவளுடைய அழகு இதனால் குன்றாமல், சிறப்புற விளங்குவதாகத் துஷ்யந்தன் கூறு கிறான். அழகற்ற மரவுரி அவளுடைய அழகைக் குறைக்குமன்றோ என்றால், இல்லை. கறுப்புப் பின்னணியில் வைரக் கல் சிறப்புற ஒளிர்வது போல், இந்தக் குறை அவளுடைய அழகை மிகுதியாகக் காட்டுகிறது. இதற்குத் துஷ்யந்தன் வாயிலாகக் காளிதாசர் இரண்டு உவமைகளைக் கூறுகிறார்.

தாமரைமலரைச் சுற்றிப் பாசி இருந்தாலும் அதனால் அந்த மலரின் அழகு குன்றாமல், மனங் கவருமாறு சிறப்புறவே விளங்குகிறது. சந்திர னில் களங்கம் இருப்பினும், அதன் அழகு குறைவதில்லை; மிகுதியாகவே உள்ளது. அவ் வாறே இந்த அழகிய பெண்கொடியும் மரவுரியை அணிந்திருப்பினும், கண்ணுக்கு இனியவளாகவே இருக்கிறாள் என்று கூறிவிட்டு, அவ்வளவோடு நிறுத்திக்கொள்ளாமல், இவற்றால் ஒரு பொது உண்மையையும் மன்னன் வாயிலாகப் புகல வைக்கிறார் காளிதாசர். அதாவது, 'அழகுக்கு அழகு செய்யாததும் உண்டோ!' என்று ஒரு வேற்றுப்பொருள் வைப்பு அணியுடன் இந்த சுலோகத்தை முடித்துப் படிக்கும் ரசிகர்களின் மனதைக் கொள்ளை கொள்கிறார். நாமும் காளிதாசரின் கைபட்டால் எந்தப் பொருள்தான் கவினுற மிளிராது எனப் பாராட்டி மகிழ்கிறோம்.

நவரசங்களும் சிறப்புற வெளிப்படுமாறு கவிதை புனைவதிலும் காளிதாசர் ஒப்பற்றவர் என்று குறிப்பிட்டோம். இங்கு வெகுளி காரண மாக வெளிப்படும் அச்சச்சுவையைக் காணபோம்.

'குமாரசம்பவ'த்தில் சிவபெருமான் இமயத்தில் தவம் செய்துகொண்டிருக்கும் காட்சி. அவ ருடைய தவநிலையைக் கலைத்து, அவரிடம் காமத்தை உண்டாக்கி உமாதேவியிடம் காதல் கொள்ளுமாறு செய்வதற்காக, மன்மதன் அங்கே வருகிறான். அவனுடன் வசந்தனும் வருகிறான். இவர்களின் வரவால் அங்குள்ள காட்டில் புதிய தளிர்களும் பூக்களும் வெளிப்பட்டு, எங்கும் இன்பமாக இருக்கிறது. வண்டுகள் மகிழ்ச்சி யுடன் முரலுகின்றன. பறவைகள் களிப்புடன் ஒலிக்கின்றன. பறவைகளும் விலங்குகளும் இயற்கையின் எழிலால் ஈர்க்கப்பட்டு, ஆணும் பெண்ணுமாக இணைகின்றன. அங்கே காவல் புரிந்து வரும் நந்திதேவர் இதைக் கவனித்து, 'இது மன்மதனின் செயலே' என்று துணிந்து, கோபமுற்று, 'எல்லாரும் ஜாக்கிரதை!' என்று அதட்டுகிறார். அந்தக் கோப அதட்டலின் பயன் என்ன? எல்லா உயிர்களும் அஞ்சி ஒடுங்குகின்றன. மரங்கள் அசையாமல் இருக் கின்றன. ரீங்காரம் செய்துகொண்டிருந்த வண்டுகள் ஒலிக்காமல் மௌனமாகின்றன. மகிழ்ச்சியால் ஒலித்துக்கொண்டிருந்த பறவைகள் பயந்து ஊமையாகின்றன. மேய்ந்து கொண்டிருந்த மான்கள் அச்சத்தால் மேய்வதை விடுத்து நிற்கின்றன. இவ்வாறு நந்தியம்பெரு மானின் ஆணையால் அந்தக் காடு முழுவதுமே சித்திரத்தில் எழுதப்பட்டது போல் அசையாம லிருந்தது என்கிறார் கவி காளிதாசர்.

அச்சத்தால் செயல் ஒடுங்கியதைக் காட்டி, அதிலும் ஓர் அழகைக் காட்டும் திறமை காளிதாசருக்கே கைவந்த கலை.

இனிச் சாகுந்தலத்தில் மற்றொரு காட்சி— சகுந்தலையைத் துஷ்யந்தனுடைய அரண் மனைக்குத் தக்க துணையுடன் அனுப்புகிறார் கண்வ முனிவர். அப்பொழுது அவருடைய மன நிலையையும் மெய்ப்பாட்டையும் மிகவும் சிறந்த முறையில் வெளிப்படுத்தி, சுலோகத்தை அமைத் துள்ளார் காளிதாசர்.

''இன்று சகுந்தலை செல்லப்போகிறாள் என்ற தும் இதயம் உணர்ச்சிவசப்பட்டுத் தொண்டை அடைக்கிறது. கண்ணில் நீர் முட்டுவதனால் பார்வை நன்கு தெரியவில்லை. காட்டில் வாழும் நமக்கே அன்பினால் இவ்வளவு வருத்தம் ஏற்படு

---

நான் என்ன செய்ய வேண்டும் என்பதே என் கவலை. மற்றவர்கள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பது அன்று.

—எமர்சன்

மானுல் வீட்டில் வாழும் இல்லத்தார்களுக்குத் தங்கள் சொந்த மகளைப் புதிதாக முதல் முறை பிரியும்போது எவ்வளவு துயரம் உண்டாகாது!'' என்று கண்வர் கூறுவதாக இது அமைந்துள்ளது.

இங்கே, சகுந்தலை செல்லப்போகிருள்; இன்னும் செல்லவில்லை. அதற்குள் வருத்தம் ஏற்படுகிறது. 'சகுந்தலா' என்னும் சொல் சிறப்பான குறிப்புப் பொருள் உடையது. சகுந்தலை கண்வ முனிவரின் வளர்ப்புப் பெண்ணேயன்றிச் சொந்த மகள் அல்ல. சகுந்தம் என்ருல் பறவை; பறவைகளால் பாதுகாக்கப் பட்டவளாதலால் சகுந்தலா என்ற பெயர் ஏற்பட்டது. அப்படி இருந்தும் அவள் பிரிவு, துயரைத் தருகிறது. இதற்கு மாருக, நான்காவது அடியிலுள்ள 'தநயா' என்னும் சொல் சொந்த மகளைக் குறித்துத் துயரின் மிகுதியைக் காட்டும். இவ்வாறே, 'காட்டில் வாழ்பவர்' என்ற சொல்லும், 'இல்வாழ்வார்' என்ற சொல்லும் வேறுபாட்டை மிகுதியாக விளக்குகின்றன. காட்டில் வாழும் முனிவர்கள் உலகப் பற்றற்று இறைவனையே பற்றுபவர்கள். ஆனுல் இல்வாழ்வாரோ பாசமும் அன்பும் படைத்தவர். எனவே அவர்களுக்குப் பிரிவுத் துயர் பெரிதும் உண்டாகும். இறுதியாக, 'புதிதாக' என்ற சொல் மிகவும் பொருத்தமானது. திருமணம் ஆனதும் தாய் தந்தையரை விட்டுப் புதிதாக வந்த கணவனுடன் செல்லும் புதிய பிரிவுதான் பெற்ருேர்களை மிகவும் வாட்டும் என்பது எவ்வளவு உண்மையானது என்பது சிந்தித்தால் தெளிவாகப் புலனுகும்.

இவ்வாறு வாங்கரும் பாதங்களும் பதங்களும் கொண்டு சுலோகத்தைப் படைத்துள்ள காளிதாசரின் கவிநலத்தையும் காவிய அமைப்பையும் என்னென்று புகழ்வது! அவருடைய மேக ஸந்தேசம், மாளவிகாக்னிமித்ரம், ருது ஸம்ஹாரம், விக்ரமோர்வசீயம் முதலிய படைப்புக்களிலிருந்து எவ்வளவோ நயமான இடங்களைக் கண்டு மகிழலாம். இடமின்மை பற்றி இவ்வளவுடன் அமைதி பெற வேண்டியுள்ளது. காளிதாசரின் கவிதைநலம் இலக்கிய உணர்வுள்ளோர் எல்லாராலும் உணர்ந்து இன்புறத் தக்கது.

# திரௌபதி

யுதிஷ்டிரர் இந்திரப்பிரஸ்தத்தில் தனித் தலைநகர் அமைத்துக்கொண்டு, அங்கே தேவர் தச்சன் மயனைக் கொண்டு வெகு அற்புதமான மாளிகை கட்டச் சொன்னுர். அந்த மாளிகையில், சாதாரணத் தரை போலத் தோன்றும்; ஆனுல் அது ஸ்படிகம் போன்ற தண்ணீரைக் கொண்ட தடாகமாக இருக்கும். அழகிய தடாகம் போலத் தோன்றும், ஆனுல் அது வெறுந்தரையாக இருக்கும்.

மாளிகை கட்டி முடிந்ததும், யுதிஷ்டிரர் ராஜசூய யாகம் நடத்தினுர். அதற்கு எல்லா மன்னர்களும் வந்து காணிக்கை செலுத்தினுர்கள். வெகு விலையுயர்ந்த பொருள்களாகக் கொண்டு வந்தார்கள். அவற்றை வாங்கிப் பொக்கிஷத்தில் வைப்பது துரியோதனனின் வேலையாக இருந்தது.

யுதிஷ்டிரருக்கு வந்து சேர்ந்த அந்த விலைமதிக்க முடியாத பொருள்களைக் கண்டதும் துரியோதனனுக்குப் பொருமை உண்டாயிற்று.

ராஜசூய யாகம் முடிந்தது. எல்லா அரசர்களும் ஊர் திரும்பிவிட்டனர். துரியோதனனும் அவனுடைய தம்பியரும் கிருஷ்ணனும் மாத்திரம் இருந்தனர்.

துரியோதனன் வெகு ஆத்திரமாக, யுதிஷ்டிரரும் மற்றவர்களும் வீற்றிருந்த ராஜசபைக்கு வந்தான். வழியில் தரையில், தடாகம் இருப்பது போலத் தோன்றியதும், தன் ஆடைகளைத் தூக்கிக்கொண்டான். ஆனுல் என்ன ஏமாற்றம்! அது வெறும் கட்டாந்தரை! சிறிது தூரம் வந்ததும், வெறுந்தரையாக அவனுக்குத் தெரிந்தது. ஆனுல் அது தடாகம்! அதில் அவன் விழ, அவனுடைய ஆடைகள் நனைந்தன.

இதைக் கண்டு பீமன் பலமாகச் சிரித்தான். திரௌபதி, ''குருடருடைய மகன்; இவரும் குருடராகிவிட்டார் போலத் தோன்றுகிறது!'' என்று சொன்னுள். திரௌபதி இப்படித் தன்னைப் பழித்தது துரியோதனன் காதில் விழுந்துவிட்டது.

இந்தப் பழிப்புத்தான் பின்பு திரௌபதி துரியோதனனுல் சபையில் அவமானப்படக் காரணமாக அமைந்தது. பிறகு பாரத யுத்தத்திற்கும் காரணமாயிற்று.

—நாடோடி

# முன்னேறிச் செல்லுங்கள்

சுவாமி விவேகானந்தர்

நீங்கள் கடவுளின் குழந்தைகள்; அழியாத பேரின்பத்தின் பங்குதாரர்கள்; புனிதமும் பூரணத்துவமும் பெற்றவர்கள்.

நீ உன்னை பலவீனன் என்று ஒருபோதும் சொல்லாதே. எழுந்து நில். தைரியமாக இரு. வலிமையுடன் இரு. பொறுப்பு முழுவதையும் உன் தோள்மீதே சுமந்துகொள். உன் விதியைப் படைப்பவன் நீயே என்பதை அறிந்துகொள். உனக்குத் தேவையான எல்லா வலிமையும் உதவியும் உனக்குள்ளேயே குடிகொண்டிருக்கின்றன.

பிராம்மணரல்லாத நண்பருக்கெல்லாம் நான் கூறுவதாவது: ''கொஞ்சம் பொறுங்கள்; அவசரப்பட வேண்டாம். பிராம்மணனுடன் சண்டையிடுவதற்குச் சந்தர்ப்பம் எங்கே கிடைக்கும் என்று காத்திருக்காதீர்கள். ஒவ்வொரு தடவையும் பிராம்மணனிடம் சண்டையிட்டுக்கொண்டே இருக்காதீர்கள். ஏனென்றால், நீங்கள் கஷ்டப்படுவதற்குக் காரணம் உங்கள் தவறேயாகும். பயனற்ற விவாதங்களிலும், பத்திரிகைச் சண்டைகளிலும் உங்கள் சொந்த வீடுகளில் வீணான போர் நடத்திப் பாவம் தேடிக்கொள்வதற்குப் பதிலாக, பிராம்மணன் பெற்றிருக்கும் அறிவுச் செல்வத்தையும் பண்பாட்டையும் அடைவதில் உங்கள் எல்லாச் சக்திகளையும் பயன்படுத்துங்கள். அதுவே நீங்கள் உயர்வு பெறுவதற்கு உரிய வழியாகும்.

இந்தியாவின் உயர்வகுப்பு மக்களே! உங்களுக்கு உயிர் இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட எகிப்திய மம்மியின் சவம் போலத்தான் நீங்கள் இருக்கிறீர்கள். 'நடமாடும் அழுகல் சவங்கள்' என்று உங்கள் மூதாதையர் வெறுத்து ஒதுக்கினார்களே, அப்படிப்பட்ட மக்களிடையே தான் இந்தியாவில் எஞ்சியுள்ள வீரியசக்தியில் சிறிதளவு காணப்படுகிறது. ஆனால் நீங்கள்தாம் உண்மையில் நடமாடும் பிணங்களாக இருந்து கொண்டிருக்கிறீர்கள். எலும்புமயமான உங்கள் விரல்களில் விலை மதிக்க முடியாத வைர மோதிரங்கள் (ஆன்மிகச் செல்வம்) உள்ளனவே, அவற்றை உங்கள் முன்னோர் பண்டைக் காலத்தில் பாதுகாப்பாகப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார்கள். இப்போது, நாற்றமடிக்கும் உங்கள் பிணம் புராதனமான நிதி நிறைந்த பெட்டிகளைக் காத்துத் தழுவிக்கொண்டிருக்கிறது. அவற்றை உங்கள் வருங்காலச் சந்ததியினரிடம் ஒப்படைத்துவிடுங்கள். ஆம், எவ்வளவு விரைவில் உங்களால் அவற்றை ஒப்படைக்க இயலுமோ அவ்வளவு விரைவில் அதைச் செய்து முடியுங்கள். நீங்கள் சூனியத்தில் மூழ்கிக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போங்கள். நீங்கள் இருந்த இடத்தில் புதிய இந்தியா எழும்பட்டும்.



பொதுமக்கள் விழித்தெழுந்தவுடன், உயர்சாதி மக்களாகிய நீங்கள் இதுவரையில் அவர்களை நசுக்கி வைத்திருந்தீர்கள் என்பதை அறிந்து கொள்வார்கள். அவ்விதம் அறிந்துகொண்டதும் அவர்கள் பஞ்சுத் திரளை ஊதுவது போல ஊதி உங்களை இல்லாமலே செய்துவிடுவார்கள்! உங்களுடைய நாகரிகத்தைப் பொதுமக்களே அமைத்தார்கள்; அவர்களே இந்த நாகரிகத்தைக் கீழே இழுத்துப்போட்டுப் புறக்கணிப்பதன் மூலம் அகற்றிவிடுவார்கள். ஆகவே உயர்சாதி மக்களாகிய நீங்கள், தாழ்ந்த வகுப்பு மக்களுக்குக் கல்வியையும் பண்பாட்டையும் தந்து, தூக்கத்திலிருந்து அவர்களை விழித்துக் கொள்ளச் செய்யுங்கள். அவர்கள் விழித்தெழும் காலம் ஒரு நாள் நிச்சயம் வரத்தான் போகிறது. அப்படி

அவர்கள் விழித்துக்கொள்ளும்போது நீங்கள் அவர்களுக்குச் செய்த நன்மையை மறந்து போகாமல் எப்போதும் உங்களிடம் நன்றி பாராட்டுபவர்களாக அவர்கள் இருப்பார்கள்.

ஒவ்வோர் உயர்சாதி மக்களும் தங்கள் அழி விற்குத் தாங்களே புதைகுழி வெட்டிக் கொள்கிருர்கள். இது எவ்வளவு விரைவில் நடக்கிறதோ அவ்வளவுக்கு அவர்களுக்குத்தான் நன்மை. தாமதம் ஆக ஆக, அவர்கள் அதிகம் கஷ்டப்பட்டு, கொடிய மரணத்தைப் பெற வேண்டியிருக்கும். ஆதலால், இந்தியாவிலுள்ள மற்ற மக்களுடைய முன்னேற்றத்திற்காகப் பாடு பட்டு உழைப்பது பிராம்மணனது கடமையாகும்.

இந்த நாட்டில் லட்சோபலட்சம் ஏழை மக்கள் பசிப் பிணிக்கும் அறியாமைக்கும் இரையான வர்களாக இருக்கும் வரையில் அவர்களுடைய உழைப்பின் பயனைக் கொண்டு கல்வி கற்று அவர்களையே கவனிக்காமல் இருக்கும் ஒவ்வொரு மனிதனையும் நான் துரோகி என்றே சொல்வேன்.

துன்பத்தில் ஆழ்ந்துள்ள ஏழைகளை வதைத்துப் பெற்ற பணத்தைக் கொண்டு ஆடையாபரணங் களால் தங்களைச் சொகுசாக அலங்கரித்துத் திரிகிறவர்கள், 'பசி பசி!' என்று காட்டுமிராண்டி களே போல் வாழும் அந்த இருபது கோடி மக்களுக்காக எதுவும் செய்யாவிட்டால், அவர்களை நன்றிகெட்ட பாதகர்கள் என்றே நான் கூறுவேன்.

'எல்லா உயிர்களையும் உன்னைப் போலவே கருது (ஆத்மவத் ஸர்வபூதேஷு)' என்ற அறிவுரை வெறுமனே புத்தகத்தில் மட்டும் அடை பட்டுக் கிடக்க வேண்டியதுதானு? பசித்த வயிற்றுக்கு ஒரு கவளம் சோறு போட முடியாத அவர்களால் எப்படி முக்தியை வாரிக் கொடுக்க முடியும்? பிறருடைய மூச்சுக் காற்றுப் பட்டாலே தாங்கள் அசுத்தமாகிவிடுவதாக நினைப்பவர்கள் எப்படி மற்றவர்களுக்குப் பரிசுத்தத்தன்மையை வழங்குவார்கள்? ''என்னைத் தொடாதே! என்னைத் தீண்டாதே!' என்ற கொள்கையைப் பிடித்துக்கொண்டிருப்பது ஒருவித மனே வியாதியே ஆகும்.

எழுந்திருங்கள்! ஆண்மையுடன் பிறருக்குத் தொண்டு புரிவதில் ஈடுபடுங்கள்.

உங்கள் சகோதரர்களுக்குத் தலைமை வகிக்க முயல வேண்டாம்! அவர்களுக்கு ஊழியமே செய்யுங்கள். தலைமை வகிக்கும் பைத்தியம், வாழ்க்கை என்ற கடலில் எத்தனையோ பெரிய கப்பல்களையெல்லாம் மூழ்கடித்து விட்டது. மரணம் நேரினும் சுயநலம் கருத வேண்டாம். தொண்டினை மறக்க வேண்டாம்.

பிறருக்கு வழி காட்டவாவது, பிறரை அடக்கி யாளவாவது எப்போதும் முயல வேண்டாம். அனைவருக்கும் ஊழியராக இருங்கள். இதுவே எல்லாவற்றிலும் முக்கியமானது.

அதிகார ஆசை, பொருமை ஆகிய இந்த இரண்டினிடமும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நான் தலைவன் என்று சொல்லிக் கொண்டு முன்வந்தால் யாரும் உங்களுக்கு உதவி செய்ய மாட்டார்கள். வெற்றி பெற விரும்பினுல் முதலில் 'நான்' என்ற உணர்ச்சியைக் கொன்று விடுங்கள்.

சமுதாயத்தில் ஒவ்வொரு குடிமகனுக்கும் பணம் கல்வி அறிவு ஆகியவற்றைப் பெறு வதற்குச் சமமான வாய்ப்பு வசதிகள் இருந்தாக வேண்டும். எல்லா விஷயங்களிலும் சுதந்திரம் பெற்றிருப்பது என்பது—அதாவது முக்தியை நோக்கி முன்னேறுவது என்பதுதான்—மனிதன் அடையக்கூடிய எல்லாவற்றிலும் சிறந்த நிலையாகும். இந்தச் சுதந்திரம் மலர்வதற்கு உரிய வழியில் தடையாக இருக்கும் சமுதாய விதிகள் தீமையை விளைவிக்கின்றன. எனவே அவை போன்ற சமுதாய விதிகளை ஒழித்து விடுவதற்கு உரிய நடவடிக்கைகளை விரைவில் எடுக்க வேண்டும். சுதந்திரப் பாதையில் மக்கள் முன்னேறிச் செல்வதற்கு உதவுகிற நிறுவனங்கள் எவையோ அவற்றை ஊக்குவிக்க வேண்டும்.

எல்லாவற்றிலும் முதற் பங்கு ஏழை எளியவர் களுக்குத்தான் தரப்பட வேண்டும்; அவ்விதம் தந்தது போக எஞ்சியிருப்பதைப் பெறவே நமக்கு உரிமையுண்டு. முதலில் நம்மைச் சுற்றி இருப்பவர்களைத் தெய்வமாக நினைத்து வழி படுங்கள். இந்த விராட் புருஷனைப் பூஜியுங்கள். உலகில் வாழும் மக்களும் மற்ற உயிர்களும்தான் நமது தெய்வங்கள்; முக்கியமாக, நமது பாரத தேச மக்களே நமது முதல் வழிபாட்டிற்கு உரிய

தெய்வங்கள் ஆவர். நம்மைச் சுற்றி இருப்பவர்களைத் தெய்வமாக நினைத்துத் தொண்டாற்றுவதே நாம் செய்ய வேண்டிய வழிபாடாகும்.

நமது நாடும் நமது மக்களும்தான் நமது உயிருள்ள தெய்வங்களாகும். இந்தத் தெய்வத்தின் கைகளும் கால்களும் கண்களும் உடலும் நமது நாடு முழுவதும் எங்கும் பரவியிருக்கின்றன. மற்ற எல்லாத் தெய்வங்களும் இப்போது உறங்கிக் கொண்டிருக்கின்றன. நம்மைச் சுற்றிலும் எங்கும் பரந்து திகழ்ந்துகொண்டிருக்கும் இந்த விராட் புருஷனை வழிபடாமல், நாம் வேறு தெய்வங்களை நாடிச் செல்ல வேண்டுமா? இந்தத் தெய்வத்தை நாம் முதலில் வழிபடுவோமாக; அதன் பிறகு மற்றத் தெய்வங்களை வழிபடும் ஆற்றலை நாம் பெறுவோம்.

ஒவ்வொரு ஆணையும் பெண்ணையும்—ஒவ்வொருவரையும் பகவானுகக் கருதுங்கள்.

கடவுள் ஒவ்வொரு ஜீவனிலும் குடிகொண்டிருக்கிருர். இதைத் தவிரத் தனியாக வேறு ஒரு கடவுள் இல்லை—இந்த உண்மையை எவ்வளவோ தவங்களுக்குப் பிறகு நான் புரிந்துகொண்டிருக்கிறேன். மக்களுக்குச் சேவை செய்பவன் உண்மையில் கடவுளுக்குச் சேவை செய்பவனுகிருன்.

கண்ணுக்குப் புலப்படும் கடவுளாக விளங்கும் உன் சகோதரனையே நீ வழிபட முடியாவிட்டால், கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கும் கடவுளை எப்படி நீ வழிபட முடியும்?

நீ கடவுளை வழிபடுவதற்கென்று ஒரு கோவில் கட்டலாம். அது நல்லதுதான். ஆனுல் அதை விடச் சிறந்ததும் மிகவும் மேலானதுமான ஒரு கோவில், அதாவது மனித உடல், ஏற்கனவே இருந்து வருகிறது.

உலக நன்மைக்காக, சொல் செயல் சிந்தனை முழுவதையும் நீ தியாகம் செய்துவிட வேண்டும். 'மாத்ருதேவோ பவ! பித்ருதேவோ பவ! (உன் தாயைத் தெய்வமாகக் கருது, உன் தந்தையைத் தெய்வமாகக் கருது)' என்று நீங்கள் படித்திருக்கிறீர்கள். ஆனுல், நான், 'தரித்திரதேவோ பவ! மூர்க்கதேவோபவ!' என்று கூறுகிறேன். ஏழை, மூர்க்கன், அஞ்ஞானி, துன்பப்படுபவன் ஆகியோர் உங்களுடைய தெய்வங்களாக இருக்கட்டும். இவர்களுக்குச் செய்யும் தொண்டுதான் மிகவும் தலைசிறந்த ஆன்மிகம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

---

பயமும் தயக்கமும் உள்ளவனைத் தோல்வி தொடர்ந்துகொண்டே இருக்கும்.

—சாணக்கியர்

---

பாரதமாதாவின் நன்மைக்காக அவளுடைய மிகவும் சிறந்த, மிகவும் உத்தமமான புதல்வர்களின் தியாகம் தேவையாக இருக்கிறது என்பதை நான் திட்டவட்டமாக அறிந்திருக்கிறேன். பலரின் நன்மைக்காக, அனைவரின் சுகத்திற்காக, உலகில் தைரியமும் சிறப்பும் பெருமளவில் பெற்றிருப்பவர்கள் தங்களைத் தியாகம் செய்துகொண்டுதான் ஆகவேண்டும். என்றென்றும் நிலைத்த மாருத அன்பும் கருணையும் பொருந்திய பல நூறு புத்தபிரான்கள் இப்போது தேவைப்படுகிருர்கள்.

மனிதர்கள், மனிதர்களே நமக்கு வேண்டும். மற்றவை அனைத்தும் தயாராக வந்து சேரும். ஆனுல் வலிமை மிக்க, சுறுசுறுப்பான, சிரத்தை பொருந்திய, உண்மையில் பிடிப்புக் கொண்ட இளைஞர்களே தேவை. அத்தகைய ஒரு நூறு இளைஞர்களால் இந்த உலகமே புரட்சிகரமான நல்ல மாறுதலைப் பெற்றுவிடும். முதலில் அப்படிப்பட்ட இளைஞர்களின் வாழ்வை நாம் நல்ல முறையிலே உருவாக்க வேண்டும். அதன் பிறகுதான் ஏதாவது உண்மையான முன்னேற்றத்தை எதிர்பார்க்கலாம்.

இந்தியப் பாமர மக்களைக் கைதூக்கிவிடுதல் என்னும் இந்த ஒரே ஒரு இலட்சியத்திற்காக இதயத்தையும் ஆன்மாவையும் ஈடுபடுத்தி உழைக்கக்கூடிய இளைஞர்களிடையே வேலை செய்யுங்கள். அவர்களைத் தட்டி எழுப்புங்கள். அவர்களை ஒன்றுதிரட்டுங்கள். அவர்களுக்குத் துறவு நெறியில் பற்று உண்டாக்குங்கள். இந்தப் பணி இந்திய இளைஞர்களையே முழுவதும் சார்ந்திருக்கிறது.

